# புஷ்யமாலிகா

கவிஞர் கண்ணதாசன்



வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

மூன்றும் பதிப்பு : 1974
நான்காம் பதிப்பு : 1977
ஐந்தாம் பதிப்பு : 1978
ஆறும் பதிப்பு : செப்டம்பர், 1981
ஏழாம் பதிப்பு : நவம்பர், 1982
எட்டாம் பதிப்பு : நவம்பர், 1984



திருநாவுக்கரசு தயாரிப்பு

---

**விலை ரூ. 5-00**

அச்சிட்டோர் :
வள்ளல் பாரி அச்சகம்
26, வள்ளல் பாரி தெரு,
எம். ஜி. ஆர். நகர்,
சென்னை 600 078.

# எழுதியதைப்பற்றி எழுதியவன் சொல்வது

“எதை எழுதுவது?” என்று யோசித்து “எதையாவது எழுதலா”மென்று தொடங்கி, நான் எழுதிய எழுத்துக்கள் ஒன்றிரண்டு உண்டு. ஆனல் ‘புஷ்பமாலிகா’ அத்தகையதல்ல.

அரைகுறைத் தூக்கத்தில் ஒருநாள் நான் புரண்டு கொண்டிருந்தபோது, புஷ்பமாலிகா’ என்ற தலைப்பு எனக்குத் தோன்றிற்று.

‘ஏன் தோன்றிற்று’ என்பதற்கு ஒரு காரணமுமில்லை; ஏனே தோன்றிற்று.

‘புஷ்பமாலிகா’ என்பதற்குப் ‘பூமாலை’ என்பதுதான் பொருள்.

பலவகையான பூக்கள் நிறைந்த மாலையை, வடமொழி இப்படி அழைக்கிறது, பல ராகங்கள் சேர்ந்த பாடலை ‘ராகமாலிகா’ என்றழைப்பது போல.

இந்த வடமொழிப் பெயரை நான் விரும்பித் தான் சூட்டினேன்.

தனித் தமிழில் எனக்குப் பற்றுதலில்லை.

மொழிக்கலப்பால் ஏற்படும் தனிச்சுவையை நான் வெறுக்கவில்லை.

எனக்குத் தலைப்புத்தான் முதலில் தோன்றிற்று; அதைத் தொடர்ந்து மலரும் புஷ்பங்களை ஆண்டவனுக்கே சூட்ட விரும்பினேன்.

அதன் விளைவே இச்சிறுநூல்.

உள்மனத்தின் ஊறல்கள் உணர்ச்சிப் பிரவாகமாக வந்து விழுந்திருக்கின்றன.

பெரும்பாலும் என்னையே முன்னிலைப்படுத்தி இறைவனிடம் பேசியிருக்கிறேன்.

பல கருத்துக்கள் என் வாழ்க்கையை ஒட்டிய அனுபவங்கள்.

சில, சிந்தனையில் விழுந்த கோடுகள்.

ஊமை உள்ளம் முறையிட்டுக் கொள்ள ஆண்டவனைத் தவிர யார் இருக்கிறார்கள்?

'உன் துயரங்களைப் பிறரிடம் சொல்லாதே; பலர் அதற்காக வருத்தப்பட மாட்டார்கள்' என்றொரு மேல்நாட்டுப் பழமொழி உண்டு.

ஆண்டவன் ஒருவன்தான், நமது துயரங்களைக் கண்டு வருத்தமோ, மகிழ்ச்சியோ அடைவதில்லை.

ஆகவே, அவனிடமே என் நிலைமையை விண்ணப்பித்துக் கொண்டிருக்கிறேன்.

அவனையும் வியந்து நோக்கியிருக்கிறேன்.

இந்த நூலை மதிப்பீடு செய்து திரு என்.ஆர். தாசன் எழுதியுள்ள கட்டுரையில், எனது உள்ளத்தை உணர்ந்து ஆராய்ந்திருக்கிறார். அதுவும் இதிலேயே வெளியாகி இருக்கிறது.

ஆகவே, இதற்குமேல் நானொன்றும் சொல்ல வேண்டியதில்லை.

'கடிதம்' வார இதழில், இதை நான் கட்டுரைகளாக எழுதினேன்.

அவ்வப்போது எழுதி வாங்கியும், பிரசுரமான இதழ்களைப் பத்திரமாகச் சேகரித்துத் தொகுத்தும் வைத்திருந்த தம்பி இராம. கண்ணப்பனுக்கும், ஆர்வத்தோடு இதனை வெளியிட்டிருக்கும் வானதி பதிப்பகம் திரு. திருநாவுக்கரசுக்கும் எனது நன்றி.

இதனை, தம் கரங்களால் வெளியிட்ட என் அருமை நண்பர், தமிழக முதலமைச்சர், கலைஞர் மு. கருணாநிதி அவர்களுக்கும் எனது நன்றி.

சென்னை,
12—1—71

அன்பன்,
கண்ணதாசன்

# மதிப்பீடு

வீடு வீடாகச் சென்று அவன் பிச்சை எடுத்துக் கொண்டிருந்தான். அந்த வழியாக அரசன் வந்தான். தனக்குப் பெரும் வெகுமதி கிடைக்கப் போவதாகப் பிச்சைக்காரன் நினைத்தான். ஆனால் அரசன், அவன் எதிரில் வந்து நின்று, பிச்சையாக எதுவும் கொடுக்கவில்லை. மாறாக, கைகளை நீட்டி அவனே பிச்சை கேட்டான். பிச்சைக்காரன் திகைத்தான்; ஆயினும் தன்னிடம் உள்ளவற்றில் ஒரு தானியத்தை மட்டும் அரசனுக்குப் பிச்சையாகப் போட்டான். அந்தி நேரத்தில், அவன் தன் இருப்பிடத்திற்குத் திரும்பியதும், தானியங்களைக் கீழே கொட்டிப் பார்த்தான். அவற்றில் ஒரே ஒரு தானியத்தைக் கண்டு அவன் ஆச்சரியமுற்றான். அந்தத் தானியம் தங்கத்தினாலாகி இருந்தது.

'இழக்கிறவன் பெறுகிறான்' என்ற கருத்தே, இந்தக் குட்டிக் கதையிலிருந்து நாம் மேலெழுந்தவாரியாக அறிவதாக இருந்தாலும், அதுவே முழுமையான கருத்தல்ல. 'தானென்னும் உணர்ச்சியினை விட்டொழிப்பவனே உயர்ந்த பெருமைகளையும், பேறுகளையும் பெறுகிறான்' என்பதே இக்கதையின் அடிப்படையான தத்துவ போதமாகும். அப்படியானால், இந்தப் 'புஷ்பமாலிகா'வில் தன் தவறுகளையும், குறைகளையும் குற்றங்களையுமே விரிவாகச் சொல்லி, 'தான்' உணர்ச்சியின் மூல வேரையே பிடுங்கி எறியும் **கவிஞர் கண்ணதாசன்**

எவ்வளவு பேறும், பெருமையும் பெறும் தகுதி பெற்றவர் என்று நினைத்துப் பார்க்கிறோம். கதையின் படி, ஒரு தானியத்தின் இழப்பிற்குத் தங்கத்திலான வேறொரு தானியம் ஈடாகிறது. கவிஞரின் 'தான்' இழப்பிற்கு?...அவருக்குச் சேர வேண்டிய தங்க அணி மணிகள் எத்தனை! எத்தனை!

கற்பனை நீள்கிறது; கவிஞரின் பேருரு, ஒளிமய மாகி ஜொலிக்கும் பிரமை தட்டுகிறது.

இறைவனது சிருஷ்டி அற்புதங்களையும், லீலா விநோதங்களையும் விலக்கி ஒதுக்கிக் கொண்ட இலக்கியமே உலகில் இல்லை எனலாம். பாசுரங்களும், துதிப்பாடல்களும் இல்லாத எந்த மொழியேனும் இருக்கிறதா? இலக்கிய கர்த்தாக்களால் தீண்டப் பட்ட பழைய விஷயம் இது. இருந்தும், படைப் பாற்றல் மிக்கவர்களால், ஒவ்வொரு காலக்கட்டத்தி லும் இந்தப் பழைய விஷயம் புதிய வடிவத்தினையும், அழகையும், உணர்ச்சியையும் பெற்றுவிடுகிறது.

தாகூரின் 'கவிதாஞ்சலி'க்குக்கூடக் கருவாக அமைந்தது இந்த விஷயம்தான். ஆனால், தாகூரின் ஆழ்ந்த புலமையும், தத்துவ ஞானமும், பழைய விஷயத்திற்குப் புதிய மெருகு தந்தது. கடவுளை வழிபடுவதில், சம்பிரதாய பூர்வமான முறைகளி லிருந்து மாறி, புரட்சிகரமான நோக்கில் அணுகிய பெருமை இந்தக் 'கீதாஞ்சலி'க்கு உண்டு. "Leave off your singing and chanting of beads and the worship of God in dark corners. Open your eyes and see, your God is not beforc you, God is elsewhere, go and serve him there" என்று. கடவுள் வழிபாட்டைக்கூட ஒரு

நாஸ்திகவாதியின் தர்ம ஆவேசக் கனலுடன் வெளி யிட்டதுதான், இது தனித்தன்மை பெறக் காரண மாகும்.

'புஷ்பமாலிகா' சுயமான இலக்கியப் படைப்பாக இருப்பதற்கும் இதுதான் காரணம். இதுவரை எவர் கையும் தீண்டாத, எவர் காலும் படாத, விசால வெளி யிலும் ஆழத்திலும் நின்று கொண்டு, தனக்கு முன் தெரியும் தடங்களையும் சுவடுகளையும் பொருட்படுத் தாது ஒதுக்கிவிட்டு, புதிய கோணத்தில் கவிஞர் பார் வையைச் செலுத்தியதாலேயே, பழைய விஷயம் உள் ளடக்கமாயினும் புதிய வடிவம் தரமான இலக்கிய சிருஷ்டியாகிவிடுகிறது.

இப்படிப்பட்ட விஷயங்களின் வெளியீட்டிற்குப் பொருத்தமான இலக்கிய வடிவம் கவிதையே யாகும். சந்தமும், லயமும், ஓசை நயமும் சேர்ந்து கருத்துக்கள் ஒலிக்கும்போது, வாசகன் எளிதில் கவரப்படுகிறான். உரைநடையில் இது செய்யப்படுவது சற்றுக் கடின மாகும். ஆனால் இலக்கியப் படைப்பாளியிடம் திறமை இருக்குமானால், எதுவும் கடினமானதே அல்ல. வல்ல வனுக்கு எந்தப் புல்தான் ஆயுதம் இல்லை? எந்தக் கழியும் அவனுக்குப் புல்லாங்குழலே! எந்த மரத் துண்டும் அவனுக்குத் தெப்பமே! கவிஞர் வல்லவர்! எனவே, புல் அவருக்கு ஆயுதமாகிறது. கவிதைமூலம் தரவேண்டிய உணர்ச்சியை வசனத்தின் மூலமே தந்து விடுகிறார். கவிஞரின் ஆற்றல் இந்த இரு இலக்கிய வகைகளிலும் குறிப்பிடத்தக்க அளவில் உள்ளது என்பதற்கும் இது திருஷ்டாந்தமாகும்.

இது அபூர்வமாகப் பெறத்தக்க ஆற்றலேயாகும். உலகத்திலேயே, கவிதையிலும், வசனத்திலும் ஒரு

சேர ஆற்றல் பெற்றவர்கள் மிகச் சிலரே. புஷ்கின், தாகூர், பாரதி, டி. எஸ். எலியட் என்று விரல்விட்டு எண்ணக் கூடிய சிலரில், கவிஞர் கண்ணதாசனுக்கு ஒரு முக்கிய இடம் உண்டு.

'புஷ்பமாலிகா'வைக் கவிஞர் எழுதியுள்ள நடை வெறும் வசனநடைஅல்ல; வசனகவிதை நடையாகும்.

வசன கவிதைக்கான இலக்கணம் என்ன? அவற்றின் அடிப்படையும், வீச்சும் எப்படிப்பட்டதாய் இருக்கவேண்டும்? தமிழ் இலக்கியத்தில் இதன் நிலை என்ன? உலக இலக்கியத்தில் இது எந்தப் படியில் நின்று கொண்டிருக்கிறது?

வசன கவிதைக்கு இதுவரை எந்த இலக்கணமும் வகுக்கப்படவில்லை. உருவமும் உள்ளடக்கமுமே இதன் அமைப்பை நிர்ணயம் செய்வதாக நாம் கொள்ள வேண்டும். வசனத்தின் உருவத்தையும், கவிதையின் உள்ளடக்கத்தையும் கொண்டு பிறப்பதே, 'வசன கவிதை' என்று, நாம் குறைந்தபட்ச அளவுகோலை வைத்துக் கொள்வது தவறல்ல.

ஆனால், எது எப்படி இருப்பினும், இல்லாவிட்டாலும், ஒன்று இருந்தே தீரவேண்டும். அதுதான் ஆழ்ந்த கனத்த சிந்தனை! இதுகூட ஜீவனற்று ஜடமாகக் கிடந்து பலன் இல்லை. சிந்தனை, துடிப்பும் துருதுருப்பும் நிறைந்ததாக இருக்க வேண்டும். சமுத்திர அலைகள்போல் ஒன்றிலிருந்து ஒன்று தாவிச் செல்வதாகவும், காற்றுடிபோல் மேலே மேலே முண்டி அடித்துச் செல்வதாகவும், ஊற்றுப்போல் சுரந்து சுரந்து நீர் கொட்டுவதாகவும் அமைய வேண்டும். தமிழில் வசனகவிதைக்கு முன்னோடியான பாரதியின்

எழுத்தில், இந்தச் சிந்தனை அலைகள் மேலே மேலே கைவீசி உதைப்பதை நாம் காண்கின்றோம்.

“தீ எரிக.

அதனிடத்தே நெய் பொழிகின்றோம்.

தீ எரிக.

அதனிடத்தே தசை பொழிகின்றோம்.

தீ எரிக.

அவனிடத்தே செந்நீர் பொழிகின்றோம்.

தீ எரிக

அதற்கு வேள்வி செய்கின்றோம்.

தீ எரிக......” —என்று கூறும்போதும் சரி,

“காற்று வருகின்றான்.

அவன் வரும் வழியை நன்றாகத் துடைத்து நல்ல நீர் தெளித்து வைத்துவிடுவோம்.

அவன் வரும் வழியிலே சோலைகளும், பூந்தோட்டங்களும் செய்து வைப்போம்.

அவன் வரும் வழியிலே கர்ப்பூரம் முதலிய நறும் பொருள்களைக் கொளுத்தி வைப்போம்.

அவன் நல்ல மருந்தாக வருக.

அவன் நமக்கு உயிராகி வருக.

அமுதாகிவருக...”—என்று கூறுகிற இடத்திலும் சரி,

“உயிரே, நினது பெருமை யாருக்குத் தெரியும்?

நீ கண்கண்ட' தெய்வம்.

எல்லா விதிகளும் நின்னுல் அமைவன.

எல்லா விதிகளும் நின்னுல் அழிவன.

உயிரே,

நீ காற்று, நீ தீ, நீ நிலம், நீ நீர், நீவானம்.

தோன்றும் பொருள்களின் தோற்ற நெறி நீ.

மாறுவனவற்றை மாற்றுவிப்பது நின் தொழில்,''

என்று கூறும்போது சரி, சிந்தனைகள் முகிழ்த்து நீச்சலடிக்கின்றன.

உருவக் கதைகளை மிகஉன்னதமான இலக்கியத் தரத்திற் உயர்த்திய, கலில் சிப்ரானின் எழுத்துக்கள் அத்தனையும் வசன கவிதைகளே. வசன கவிதை களுக்கு அவசியம் இருந்து தீரவேண்டிய 'சிந்தனை நீச்சல்' அவரின் எழுத்துக்களில் அபரிமிதமாய் இருப்பதை அறிந்து கொள்வதில், எந்த வாசகனும் தவறிழைக்க மாட்டான்.

ஒரு குழந்தை பிறந்ததும் இறந்துவிடுகிறது, அது பிறந்து மறைந்த விதத்தையும், வேகத்தையும் தனது 'BROKEN WINGS' முறிந்த சிறகுகள்' என்ற நூலில், கலில் சிப்ரான் குறிப்பிடும்போது, கருத்தும் சிந்தனையும் ஆடிக் குலுங்கிச் சொரிவதைக் காண் குறும்.

''It was born like a thought, died like a sigh and disappeared like a shadow.''

கவிஞர் கண்ணதாசன், தனது 'புஷ்பமாலிகா'வில், கருத்துக்களையும் சிந்தனைகளையும் அலை அலையாகத்

தோற்றுவிக்கிருர்; சரஞ்சரமாகப் பூக்களைக் கொட்டி வைக்கிருர்; புஷ்பவானத்திலிருந்து வேகமாக இரைச்சலிட்டு மேலே பாய்ந்து, பல நிறத்தில் பூக்களாய், மின்னல் துளிகளாய், ஒளிப்பொறிகள்சிந்துவதுபோல் கருத்துக்களை உதிர்க்கிருர்.

''குடிபோதையில் என் உளறல்கள் மழலைகளாகின்றன.

காதல்போதையில் என்உளறல்கள் கவிதைகளாகின்றன.

பக்தி போதையில் என் உளறல்கள் உனக்குச் சூட்டப்படும் புஷ்பங்களாகின்றன.''

—என்று மன அமைதியோடு இருக்கும்போதும் சிந்தனை அலைகள் கூட்டமிடுகின்றன. மனம்வெதும்பி நொந்து துயரப்படும்போதும், அந்தச் சிந்தனை நீச்சலில் மாற்றமில்லை.

''இனி பகைவர்கள் வேண்டாம்; நண்பர்களைக் கொடு.

மூடர்களை நெருங்கவிடாமல் அறிஞர்களை நெருங்கச் செய்.

இவனது ஆடைகளே இவனைப் பகைக்காமல் காப்பாற்று.

இது நஞ்சு, இது அமுது எனப் பேதங் காட்டு.

எனது வாக்கியங்களில் நீ வார்த்தையாக வந்து நில்.''

கேள்வி எழும்போதுகூடத் தனித்த கேள்வியாக இருப்பதில்லை, சிந்தனை கையைப்பிடித்துப்பரபரவென

இழுத்து வருகிற காரணத்தால், கேள்வி படைகூட்டி வருகிறது;

"மூல முதல்வனே,

மூலம் புரிந்து விட்டால் உரை எதற்கு?

உண்மை தெரிந்துவிட்டால் பிரார்த்தனை எதற்கு?

விளக்கம் தெளிவாக இருந்தால் விவாதங்கள் எதற்கு?

நீ எனக்குச் சரியான வழிகாட்டினால் இந்த வேதனை வேண்டுகோளும் எதற்கு?

காலிலே குத்திய பின்பு 'இது முள்' ளென்று நெஞ்சு சொல்லுகிறதே. அது குத்துவதற்கு முன்பு கண் சொல்லிவிடக் கூடாதா?

அனுபவ விளைவுகளே, அறிவின் விளைவாக ஆக்கித்தரக் கூடாதா?"

இப்படிப்பட்ட சிந்தனைப் பாய்ச்சலுக்கு, கவிஞர் எழுத அமைத்துக்கொண்ட முறை, பெரிதும் உதவிகர மாக உள்ளது.

கடவுளின் சிருஷ்டிகள் ஒரு தனி மனிதனின் பார் வையிலிருந்து கணக்கிடப்படுகின்றன. அந்தத் தனி மனிதனாகக் கவிஞர் தன்னையே ஆக்கிக்கொள்கிறார், எனவே, சிந்தனையும், தத்துவக் கருத்தும் ஊற்றெடுத் துக் கொட்டுவதற்குத் தடையற்ற இயற்கையான ஒரு பாத்திரம் கிடைத்துவிடுகிறது.

அந்தத் தனிமனிதன் கடவுளின் சிருஷ்டி லீலை களைக் கண்டு பிரமித்து மயங்கிப் போனவனாக மட்டும் இல்லை; வழக்கம்போல் மாயையிலும் மயக்கத்திலும்

ஊறி ஒடுங்கி, தத்துவ விசாரணையையோ ஞானத் தேடலையோ கைவிட்டுவிட்டவனாகவும் இல்லை. அவன் நெஞ்சு கனன்று கொண்டிருக்கிறது; அவன் அறிவு ஆயிரம் விளக்குகளை ஏற்றி வைத்துக் கொண்டு, மூலை முடுக்கெல்லாம் தேடித் திரிகிறது.

இறைவனின் சிருஷ்டி அற்புதங்களை விளக்குவது தான் இந்த எழுத்தின் நோக்கம். ஆயினும், கவிஞர் ஆழ்வாராகவோ, நாயன்மாராகவோ ஆகிவிடவில்லை. ஆழ்வார்களிடமும், நாயன்மார்களிடமும் கேள்விகள் ஒடுங்கிவிட்டன. கவிஞரிடம் கேள்விகள் சூறைக்காற்றாய் எழுந்து புழுதி இறைத்துக் கொண்டிருக்கின்றன. அவர்களின் நெஞ்சில் ஒரு நிறம் முழுக்கப் படிந்துவிட்டது. கவிஞரிடம்...? நிற மாற்றங்கள் இன்னும் இருக்கின்றன. எனவே, அவர் கண்கள் பக்தி விஷயத்தில் ஒரு பக்கத்தையே பார்த்துக்கொண்டிருக்கவில்லை. பல பக்கங்களையும் பார்க்கிறது. அவர் தொடுக்கிற மாலையில், பல மணமும், பல நிறமும் கொண்ட மலர்கள் தெரிகின்றன.

"மேலே முள்.

இன்னும் உள்ளே இனிய கனிகள்.

அவற்றின் நடுவிலும் கொட்டைகள்.

முள்ளில் நடந்து வாழ்க்கையைத் தொடங்கு.

வழியில் தோன்றும் சக்கைகளையெல்லாம் நீவி எடு.

இதோ சுளைகள் உன் கையிலே!

அவசரப்படாதே!

பல்லுக்கு ஆபத்து!

நிதானமாக அனுபவி!

பிறர் கண்ணை உறுத்தாதவாறு வாழ்க்கையை நடத்து.

இறைவா!

பலாப்பழத்தின் படைப்பு இப்படி ஒரு பொருளை எனக்கு உணர்த்துகிறது.''

—என்று கருதுகிற கவிஞர், அந்தத் திக்கில் பார்ப்பதோடு நின்றுவிடவில்லை. மறு திக்கையும் பார்க்கிறார். அப்பொழுது முந்திய முடிவுகளில் சந்தேகம் நிற்கவில்லை.

“இந்தப் பொருள்களெல்லாம் நான் சிருஷ்டித்துக் கொண்ட மாயைகளாகவும் இருக்கலாம்'' என்பதோடு அந்தச் சந்தேகம் நிற்கவில்லை.

“மூல ஆசிரியன் நினைக்காத ஒன்றை உரை ஆசிரியன் சொல்வதுபோல், நான் சொல்வதாகவும் இருக்கலாம்'' என்றும் கருதுகிறார்.

ஆகவேதான் இறைவனின் சிருஷ்டிகளிலும் குறை இருப்பதாகக் காண்கிறார். ஒவ்வொரு புஷ்பத்தையும் சமர்ப்பணம் செய்து விடைபெறும்போது, சிருஷ்டிக் கோளாறுகளைக் குறிப்பிட்டே செல்கிறார்.

“நீ துரத்துகிற பாதையிலேயே தான் நான் போய்க் கொண்டிருக்கிறேன்.

நான் விழுந்தால் அது உன்னாலே!

நான் எழுந்தால் அதுவும் உன்னாலே!''

என்று மென்மையாகவும் விமர்சிக்கிருர். ஆவேசத் துடன் கைகளை நீட்டிக் குற்றம் சாட்டவும் அவர் தயங்கவில்லை.

"ஒரே ஒரு அறிவை மட்டும் தெளிவாகக் கொடுத்து விட்டு, பாக்கி அத்தனையையும் என்னிட மிருந்து பறித்துக் கொண்டு, இந்தப் பூமிக்கு என்னை அனுப்பி வைத்த பரம்பொருளே!

உன் கட்டளைப்படி ஒரு தாயும், தந்தையும் செய்த முட்டாள்தனத்தில் பிறந்த ஜீவராசி, தான் நீரில் வாழும் இனமா, நிலத்தில் வாழும் இனமா என்று தெரியாமல் தவிக்கிறது.

இது என்ன குற்றம் செய்தாலும், அது நீ செயத குற்றமே!"

இறைவனுக்காகவே முழுக்க முழுக்கப் பேசுகிருர் கவிஞர். அப்பொழுது பிரச்னை எழவில்லை. தனக்காக அவர் பேச ஆரம்பிக்கிருர். தர்க்கத்திற்கு விதை விழுந்துவிடுகிறது; மேடை அமைந்துவிடுகிறது; திப்பந்தம் ஏற்றப்பட்டுவிடுகிறது.

கருத்துக்கள் இறைக்கப்படுகின்றன; காட்சிகள் மோதுகின்றன; உணர்ச்சிமயமான சூழ்நிலை அமைந்து விடுகிறது.

சர்ச்சைக்குரிய வித்து ஊன்றப்பட்ட காரணத் தாலேயே, இது தரமான இலக்கியமாவதற்கான சக்தி யைப் பெற்றுவிடுகிறது. "நல்லதைப்போல் தவறுக் கும் இறைவனே பொறுப்பு" என்ற கருத்தே, இந்த இலக்கிய ஜனிப்புக்கான கருவாகும். இதை நிலை நிறுத்தவே, கவிஞரின் ஆழ்ந்த அறிவும், கவித்வமும்,

தத்துவ ஞானமும்,தர்க்கத்திறனும் ஒன்றையொன்று முண்டியடித்துக்கொண்டு வந்து பயன்பட்டுள்ளன.

கழைக் கூத்தாடியின் நுணுக்கமான ஆட்டத்தின் நிழல், கவிஞரின் எழுத்தில் ஊடாடி நிற்கிறது. சிருஷ்டியின் ஒளிப் பகுதியில் கையை வைக்கிற கவிஞர் இருட்பகுதியிலும் கையை வைக்கிறார். அவர் பெற்ற உணர்ச்சிகள் அபிப்பிராயங்கள் ஒன்றுக்கொன்று முரண்பட்டவைகள்போல் வெளியே தெரிகின்றன. அவை தனித்துத் தேங்கிக் கெட்டியிட்டுப் போய்விடுமோ என்று நாம் நினைக்கிறோம். ஆனால், அவை கசிந்து, இளகி, நன்றாகக் கலந்து கொள்கின்றன. இறைவனது சிருஷ்டி அழகைப் புகழ்வதில் ஒருசேரப் பங்கு கொள்கின்றன. இரு தோற்றங்களை வெவ்வேறாக முதலில் காட்டி, பிறகு மெல்ல மெல்லக் கரைத்து ஒன்றாக ஆக்கும் மாயத்தைக் கவிஞர் எழுத்துக்களில் செய்திருக்கிறார். இந்தக் காட்சி தரிசனம் கோடிகாட்டியதுமே நெஞ்சு புல்லரிக்கிறது. விவரிக்க இயலாத உணர்ச்சிகளின் அலை அசைப்பில் மூச்சுத் திணறிப போகிறோம். இறைவனின் சிருஷ்டி அற்புதங்களைக் கண்டு கவிஞர் வியக்கும் அதே வாசகங்களையே, அவருக்கும் திருப்பிச் சொல்ல நம் மனம் துடிக்கிறது;

"சிருஷ்டி தேவனே,

உன்னை நினைக்கும் போதெல்லாம் வியப்பு மேலிடுகிறது."

இறைவனைப் பற்றிய இலக்கியம் என்ற ரீதியில் 'புஷ்பமாலிகா' தனித்து நிற்க வேறொரு தகுதியும் உண்டு.

மன அவசங்களும், சலனங்களும், சலிப்பும், விரக்தியும் கொண்ட ஒரு தனிமனிதன் இறைவனை உணர்ச்சியோடு விமர்சிக்கிருன். விமர்சனமும், மதிப்பீடும் வாழ்த்தாக அமைந்துவிடுகிறது. வழிபாட்டிலும், ஸ்தோத்திரத்திலும் இது ஒரு புது வகையாகும்.

"உள்ளத்தை ஒருமுகப்படுத்திவிட்ட எந்த ஞானியையும் கலைத்து வேட்டையாடத்த தானே, புலன் உணர்ச்சிகளைப் படைத்தாய்.

உனது பாவைக் கூத்து அற்புதமானது."

—என்று லேசான கிண்டலுடன் விமர்சிக்கிருர்; ஆயினும், பக்தி உணர்ச்சி வறண்டு போகவில்லை.

"நீ கட்டிய உலகத்தில் விழுவதற்கு ஏராளமான பள்ளங்கள் உண்டு.

விழாமல் நடக்கக்கூடிய கால்கள் இல்லை.

எந்தக் கால் எந்தப் பாறையில் வழுக்கும் என்பது உனக்கு மட்டுமே தெரியும்.

இடியாப்பம் போல் உள்ளத்தைப் படைத்துவிட்டு, அதன் தலைப்பைத் தேடுகிற பொறுப்பை எங்களிடம் கொடுத்திருக்கிருய்."

—என்ற வாசகங்களில் தலை தூக்கி நிற்கும் விமர்சன உணர்ச்சிக்குக் கீழே, பக்தியும் தெய்வீக வழிபாடும் தென்றலாக அசைந்து, தளிர்களைத் தடவி நெகிழ வைக்கவில்லை என எவர் கூற முடியும்?

மனத் துயரங்களைக் கவிஞர் விளக்கும்போது, உவகைச் செறிவும், உருக்கமும், இலக்கிய நயமும் கலந்து, அவை அற்புதமாக அமைந்துவிடுகின்றன. உருவச் சித்திரங்கள் அருமையாக வரையப்பட்டு

உள்ளன; கவிஞர் உணர்த்த வருகிற விஷயங்கள் சித்திரங்களுக்குள் அதிசயிக்கத்தக்க அளவில் பதிந்து கொள்கின்றன. சித்திரங்களை வரைவதிலும், சித்திரங் களுக்குள் தத்துவங்களைச் செருகி வைப்பதிலும், வார்த்தைகள் எண்ணி அளந்து, நிறுத்துப் போடப் பட்டுள்ளன. ஆகவேதான், ஒவ்வொரு வரியும்,கவிதை யாகிறது; சிற்பமாகிறது; சித்திரமாகிறது.

"ஆமைக்குக் கனமான ஓடு கொடுத்த உன் கருணையான உள்ளம்,

இந்த ஏழைக்கு ஏன் இவ்வளவு மென்மையான உள்ளத்தைக் கொடுத்தது?"

—என்று கேட்கும்போதும்,

"குழம்பிலே உப்பு அதிகமென்று தண்ணீரை ஊற்றுகிறேன்.

தண்ணீர் அதிகமென்று உப்பைப் போடுகிறேன்.

உப்பு அதிகமாகிறது.

நான் ஒரு நல்ல சமையற்காரனல்ல."

—என்று சுய விமர்சனம் செய்யும் போதும்,

"கடலிலிருந்து நீரை வாங்கிய மேகம் ஏதோ ஒரு பூமியிலே அதைத் துளிகளாகச் சிந்துகிறது.

அந்தத் துளிகள் ஒன்றுகூடி ஏதோ ஒரு குளத் திலே சங்கமிக்கின்றன.

அவை புறப்பட்ட இடமெங்கே? புகுந்த இட மெங்கே?

என் நிலையும் அதுதான்.

புறப்படுவது மட்டுந்தான் எனக்குத் தெரிகிறது.

புகுந்த பிற்பாடுதான், எங்கிருக்கிறோம் என்பது புரிகிறது.''

—என்று விதியின் கைப்பதுமையாகத் தன்னை நினைக்கும் போதும்,

''தாமரையின் தண்டையும், வேரையும்விட அதன் புஷ்பமே பெரியது.

தண்டும், வேருமே முதலில் தோன்றின.

தன் அளவுக்கு மீறிய புஷ்பத்தை வெளியிடும் சக்தி அதற்கிருந்தது.

கொடுமையான நரகங்களிலும், சொர்க்கங்கள் முளைத்தெழ முடியும்.''

—என்று நம்பிக்கை பெறும்போதும்,

''தேனையே உணவாகக் கொண்ட தேனீ, தேன் குடத்தில் விழுந்துவிட்டால், அதுவே அதன் சமாதியாகிவிடுகிறது.

என் கதையும் அதுதான்.

நான் அன்பைச் சேகரிக்கிறேன்.

அதிலேயே விழுந்து மடிகிறேன்.

நான் இரக்கத்தைச் சேகரிக்கிறேன்.

அதிலேயே மூழ்கி அழிகிறேன்.

எனது சவக்குழியை நான் தோண்டுகிறேன்.''

—என்று தன்னிரக்கம் கொள்ளும்போதும்,

உவமை மலராகி மணக்கிறது; உருவகம் சந்தன மாய்க் கமழ்கிறது.

தரமான இலக்கியத்தின் குணஅம்சமே, இலக்கிய கர்த்தா விவரிக்கிற விஷயம் இனியதாயினும், கசப்பா யினும், அந்த அனுபவங்களைத் தன் வாழ்வில் கண்டு விட வேண்டும் என்ற மன உணர்வை வாசகனிடம் தோற்றுவிப்பதாகும். எழுத்தின் நயம் கசப்பை அழித்துவிடுகிறது. சோகத்தை மறைத்துவிடுகிறது. எல்லாவற்றையும் அழகு மயமாக்கிவிடுகிறது. சிதை நெருப்பாய் நெஞ்சை எரிக்கும் வேதனைகளை ஏற்கும் மனத்துணிவை அவனுக்கு இவை தந்துவிடுகின்றன. அவை வாழ்க்கையில் தவறிவிடக் கூடாத இனிய அனுபவமாக நினைக்கத் தூண்டுகின்றன.

'புஷ்பமாலிகா' வைப் படிக்கிற எந்த வாசகனும் இந்தப் பாதிப்பிலிருந்து தப்பிவிட முடியாது.

"...வழியெங்கும் பாடல்கள் ஒளிபரப்பாகின்றன.

எல்லோரும் கேட்கும்படியாகவும், எழுதியவன் மட்டும் கேட்க முடியாமலும், அந்த ஊர்வலம் தொடர்ந்து போகிறது.

ஊர்வலத்தின் முன்னால், ஒரு இளைஞனின் கையில் உள்ள சட்டியில், அரை நெருப்பு எரிந்து கொண் டிருக்கிறது.

அதுவரை உனது தேவாலயத்தில் மெழுகுவர்த்தி கள் எரிகின்றன."

—என்ற வரிகளைப் படிக்கிற எவர்தான், மரண நேசிப்பிற்கு இலக்காகாதவராய் இருக்க முடியும்?

"உடம்பும் உள்ளமும் ரணமான பிற்பாடுதான் மனிதன் தன்னைப்பற்றிச் சிந்திக்கிறான். அவன் பிணமான அன்றுதான், உலகம் அவனைப் பற்றிச் சிந்திக்கிறது. இது என்னுடைய ரணக்கோலம்."

—என்பதைப் படிக்கிற வாசகன், அந்தக் கோலத்தைத் தன்னிடமே காணவேண்டும் என்று வெறிகொள்ளவே செய்கிறான். தரமான இலக்கியம் என்பதற்கான குறியீடுகள் இவை என்றே நாம் கொள்ள வேண்டும்.

வெறும் செய்திகள் இலக்கியமாக மாறுவதே தரப்படும் விதத்தினால்தான்! அழகும், ஆழமான உணர்ச்சிகளை உருவாக்கும் பலமும் செய்திகளுக்கு ஏற்றப்பட்டுவிட்டால், அந்தக் கணத்திலேயே அவை இலக்கியமாகிவிடுகின்றன. "நாற்பத்து மூன்று வயதாகிவிட்டது" என்ற செய்தி, கவிஞரின் பார்வையில் இப்படி இலக்கியமாகி நிற்கிறது.

"நாற்பத்து மூன்று வசந்தங்களையும், கோடைகளையும் பார்த்த பிறகும்கூட..."

அது மட்டுமா?

"என்மேல் முளைத்த கருவேல மரங்களிலிருந்து, அவ்வப்போது முட்கள் உதிர்கின்றன."

—என்றும்,

"பல குளங்களில் தவம் செய்த கொக்கு ஊர்வலம் வரப்போகிறது."

—என்றும் கூறுகிற இடங்களில், வெறும் விவரம் இலக்கியமாகக் கனிந்து நிற்பதைக் காண்கிறோம்.

எதிரெதிரான குணப் பண்புள்ள பாத்திரங்களை நேர் நிறுத்தி, அவற்றின் தன்மைகளோடு தனது நிலையைக் கவிஞர் ஒப்பிட்டு நோக்கும் போதெல்லாம், அவரது மனஉணர்ச்சிகளும், பாத்திரத் தன்மையும் சக்தி வாய்ந்த முறையில் அமைந்துவிடுகின்றன.

"நீதி மன்றத்தில் வழக்கறிஞனாக நின்று நான் வாதாட விரும்புகிறேன்;

நீயோ என்னைக் குற்றவாளியாகக் கொண்டு போய் நிறுத்துகிறாய்.

மருத்துவமனையில் வைத்தியனாக இருக்க ஆசைப் படுகிறேன்.

என்னை நோயாளியாக அங்கே கொண்டு செல் வதில்தான் உனக்கு நிம்மதி."

—என்று முரண்பட்ட பாத்திரங்கள் சிருஷ்டிக்கப் படாமல் இருந்திருந்தால்,கவிஞரின் ஆழ்ந்த உணர்ச்சி கள் இவ்வளவு கனத்தையும், வேகத்தையும் பெற் றிருக்க முடியுமா என்பது சந்தேகமே.

முரண்பாடுகளைத் தேடிக் கண்டு சுவை ஏற்றி வைக்கும் கவிஞரின் தீட்சண்யமான கண்கள், இதி காசங்களையும் விட்டு வைக்கவில்லை. அவதாரங்கள், புராண நாயகர்களைப் பற்றிய விவரங்கள் நமக்குத் தெரிந்தவைதாம். அகலிகையின் சாபவிமோசனமும், சீதையின் அக்னிப் பிரவேசமும், கோபிகா ஸ்திரீ களுடன் கோபாலன் ஆடிய ஆட்டமும், திரௌபதி யின் மானங்காத்த செயலும் எல்லோருக்கும் தெரிந் தவைதான். ஆனால் எல்லோருக்கும் தெரியாதது ஒன்றுண்டு, அது இதுதான், அவற்றை இணைத்து

முரண்பாடு காணுததும், முரண்பாட்டில் ஒரு கருத்தை ஜனிக்கச் செய்ய இயலாமையுந்தான். கவிஞர் அதைச் செய்துள்ளார்.

விவரங்களை ஒரு கோணத்தில் சந்திக்க வைக்கிருர், முரண்பாடு தெரிகிறது. அந்த முரண்பாட்டில், தான் சொல்லவந்த கருத்தை அநுயாசமாகச் சொல்லி விட்டுப் போய் விடுகிருர்:

"பிறரது அனுபவங்களிலிருந்து பாடம் பெற்ற பிறகாவது சுயதரிசனம் பூர்த்தியாகி விடுகிறதா?

இல்லை!

சுயமாகவும் கொள்முதல் செய்தாக வேண்டும்."

—என்ற கருத்தை நிலைநாட்ட இதிகாச புருஷர்கள் எப்படித் தோலுரித்துக் காட்டப்படுகிருர்கள் என்பதைக் காணுங்கள்:

"முனிவனுக்குத் தன் மனைவி அகலிகைமீது ஏற்பட்டிருந்த சந்தேகங்களைத் தீர்த்துவைத்த ராமன்,

உத்தர காண்டத்தில் தன் மனைவியின்மீது சந்தேகப்படவில்லையா?

கோபியர்களின் சேலைகளை மறைத்து வைத்து விளையாடிய கோபாலன், அதே சேலைகளைப் பாஞ்சாலி இழந்தபோது பதறவில்லையா?"

கவிஞர் கொண்டுவந்து நிறுத்துகிற சூழ்நிலையிலிருந்து பார்க்கிற எவருக்குத்தான், இந்தக் கேள்விகள் நியாயமற்றனவாக இருக்க முடியும்?

'புஷ்பமாலிகா'வில் அநேகமாக எல்லா வரிகளிலும் ஒரு அம்சம் மாறுதல் இன்றி இருப்பதைக் காண

முடியும். ஒவ்வொரு சொல்லும் உணர்ச்சியால் தகித்துக் கொண்டிருப்பதையும், ஒவ்வொரு வரியும் உணர்ச்சி மயமாய்ப் புகைந்து கொண்டிருப்பதையும் எவரும் அறியாமல் இருக்க முடியாது.

கவிஞர், மனம் நொந்து துடிக்கும்போது நம் நெஞ்சு உருகுகிறது; மனம் ரணமாகிறது.

“உணர்ச்சிச் சூறுவளியின் மைய மண்டபத்தில் மனித ஈசல் தவியாய்த் தவிக்கிறது.

பின்னிப் பின்னித் தொடரும் ஆசைகளால் மனித உள்ளம் கண்ணுடித் துண்டுகள்போல் சிதறுகிறது.”

—என்ற வரிகளில், நம் இதயமே சிதறுவதாகப் பிரமை தட்டுகிறது.

“இறைவா,

மனிதனுக்கு நீ எண்ணங்களை வைத்ததில் ஆச்சரியமில்லை. அந்த எண்ணங்களிலேயே அவன் வெந்து வெந்து அழிகின்ருனே அதுதான் ஆச்சரியம்.”

—என்பதைப் படிக்கும்போது நெஞ்சு கசிந்து போகிறது.

“என் இறைவா,

கோடைக் காலத்தில் தோன்றும் வெடிப்புகளைப் போல், நூற்றுக்கணக்கான வெடிப்புகளும் கீறல்களும் இந்த உள்ளத்தில் விழுந்து கிடக்கின்றன.

ஒவ்வொரு வெடிப்பினுள்ளும் கடைசி ஈரம் கசிந்து கொண்டிருக்கிறது.

மழைக்காலம் விலகிப் போய்க்கொண்டே இருக்கிறது.

நான் பார்க்கும் மேகங்களெல்லாம் நீர்ப்பிடிப்பின்றி வெண்மையாகவே இருக்கின்றன.''

—என்ற வரிகளில் ஆழ்ந்த சோகம் விம்மித் தேம்பு கிறது.

புஷ்பமாலிகாவைத் தரமான இலக்கியமாக்குவதில் இந்த உணர்ச்சி வெளிப்பாட்டிற்கும் ஒரு பிரதான இட முண்டு.

ஏனென்ருல்—

''Literature is not a statement of FACT; it is a statement of FEELING; it is Literature because of this.

—என்ற விமர்சன முடிவின் நிரூபணச் சின்னமாக நிற்க முடிவதும், அந்த உணர்ச்சியில்தான்.

''புஷ்பமாலிகா'வின் அடிப்படைக் கருத்து ஏற் கனவே குறிப்பிட்டதுபோல் கனமற்றதுதான். நயமும் இனிமையும் ததும்பும் உவமைகளாலும், சொற்ருெடர் களாலுமே அது செழித்து, வளமையுடன் கம்பீரமாய் நிற்கிறது. ஆனுல், பிரபல கன்னட எழுத்தாளரான மாஸ்தி வெங்கடேச ஐயங்கார், தமது 'ரவீந்திரநாத் தாகூர்' என்ற ஆங்கில நூலில் குறிப்பிட்டார்.

A work of Literature should be valued not for this phrase and that simile but for the whole idea which would express.''

இந்த அளவுகோல்களேயும் மீறிக் கொண்டு இலக் கியம் பிறக்கமுடியும் என்பதற்கு 'புஷ்பமாலிகா, எடுத்துக்காட்டு. வேர்களில் முழுக்கவும் நம்பிக்கை கொள்ளாது விழுதுகளின் துணையிலேயெ இது கம்பீர மாக நிற்கிறது.

உண்மையான கவிஞன் ஆகாயத்தை மட்டும் பார்த்துக்கொண்டிருப்பவன் அல்ல; மண்ணையும் பார்த்தாக வேண்டும்.

நட்சத்திரங்களைமட்டுமே அவன் எண்ணிக்கொண் டிருப்பவனல்ல; கூழாங்கற்களையும் அவன் எண்ணி யாக வேண்டும்.

உயர்ந்தது, தாழ்ந்தது-இவைஇரண்டிற்கும் அவன் பாலமாக இருக்க வேண்டும். இல்லை, இரண்டின் கல வையாகவும் இருக்க வேண்டும்.

கவிஞர் கண்ணதாசன், இந்த இரண்டின் கலவை யாகவும் இருக்கிறார்.

மிக உயர்ந்த சிந்தனைகளையும் தெரிவிக்கிறார்; சாதாரணக் கருத்தையும் வெளிப்படுத்துகிறார்.

மிக உயர்ந்த மனிதர்களையும் பிரதிநிதித்துவப் படுத்துகிறார்; சராசரி ம்னிதர்களையும் பிரதிபலிக்கிறார்.

"நான் வாழ்ந்து கொண்டே இறைவனைக் காணு கிறேன். பக்தி செலுத்திக் கொண்டே வாழ்க்கையைத் தேடுகிறேன்.

அர்த்தமுள்ள அவனது படைப்புக்களை, அதே அர்த்தத்தோடு பார்த்து, அதே அர்த்தத்துக்காக வாழ் கிறேன்."

—என்றும்

"பூஜ்ஜியத்தில் எந்த எண்களையும் ஐந்தால் வகுக்கலாம்.

சூன்யமான எந்த உள்ளமும் கற்பனையில்தான் மகிழ்ச்சியடையலாம்,

எனது கற்பனைகள் வானத்தில் பறக்கின்றன. அவை பொய்யாகி வெடித்துச் சிதறும்போது, உனது தேவாலயத்தில் எனது மெழுகுவர்த்திகள் எரிகின்றன."

—என்றும் அவரது சிந்தனை உயர்ந்து செல்கிறது. அதே சிந்தனை தாழ்ந்துபோகவும் செய்கிறது.

"அழகான பெண்ணின் திரண்ட உடல் அவனது கோயில்!...

அந்த மார்பகங்களே அவனது கோயில் கோபுரத்தின் கலசங்கள்!

மதுக்கோப்பை தீபாராதனைத் தட்டு...!"

—என்று கவிஞர் கண்ணதாசன் கூறுவது அவரை எந்த விதத்திலும் தாழ்த்தக்கூடியதல்ல. மாறாக அவர் உண்மையான கவிஞர் என்பதை வலியுறுத்தவே அது துணையாக நிற்கும்.

"Speaking the finest thought, yet representing the common man and understanding by him, a poet is the voice of a civilisation as no one else can be."

—என்று மாஸ்தி வெங்கடேச ஐயங்கார் கூறுவது கவிஞர் கண்ணதாசனுக்கு நூற்றுக்குநூறு பொருந்தி வரக் கூடியதாகும்.

துயரங்களும், சலனங்களும் அரித்தபோதிலும் கவிஞர் நம்பிக்கைவாதியாக Optimist ஆகவே இருக்கிறார். "சுகங்கள் நித்யமானவை இல்லாததுபோலத் துயரங்களும் நித்யமானவை அல்ல," என்பது அவர் அறிந்ததுதான். வந்தவை எவையும் வந்தபடியே இருப்பதில்லை, வளர்கின்றன; தேய்கின்றன; மாறு

கின்றன; மறைகின்றன. பிரபஞ்ச இயக்கத்தையும், அதில் மனித வாழ்க்கையின் சிக்கல், மர்மங்கள், ரகசியங்கள் அத்தனையையும் புரிந்துள்ளதாலேயே, எவ்வளவோ ஏக்கங்களுக்கும் நிராசைகளுக்கும் இடையில் கவிஞரால் நம்பிக்கை வறட்சியற்று Optimist ஆக இருக்க முடிகிறது.

"சந்நியாசியின் கோவணம்போல் கடைசியாக என்னிடம் மிச்சமிருப்பது நம்பிக்கை.

அந்த நம்பிக்கையிலேயே என் ஆத்ம விளக்கை அவ்வப்போது ஏற்றிக்கொண்டிருக்கிறேன்."

—என்று அடக்கமாகச் சொல்லும்போதும்,

"...என் வாழ்க்கை சரியா, தவறு என்பதைச் சொல்ல, இந்தப் பூமியில் எவனும் இன்னும் பிறக்கவில்லை."

—என்று சற்று அகந்தையுடன் சொல்லும்போதும், இந்த நம்பிக்கை உணர்ச்சிதான் கொடி உயர்த்திக் காட்டுகிறது.

மரண நேசிப்புபற்றிக் கவிஞர் தீட்டிக் காட்டும் சோக மயமான சித்திரங்களை இந்தப் பின்னணியில் இருந்து பார்த்தால்தான், இந்த விஷயத்தில் அவரைப் பற்றிச் சரியாக அனுமானித்துக்கொள்ள முடியும். மரண நேசிப்பு கவிஞரிடம் தோன்றுவது பலவீனத்தினாலோ, விரக்தியினாலோ அல்ல. வாழ்க்கையில் கொண்டுள்ள பிடிப்பும் அழுத்தமுமே, மரணத்தைக் கண்டு நடுங்காது, அதைத் துச்சமாக நினைக்க வைக்கிறது; அதே துணிவு மரணத்தை நேசிக்கவும்

தூண்டுகிறது. இதைத்தான் சிந்தி மொழிக் கவிஞ ரான டி. எல். வாஸ்வானி குறிப்பிட்டார்:

"In Life is hidden the dream of death; aud in death is hidden the door to the life beyond this Life.
So fear not death.

To die is to stand in the presence of life."

—என்ற வாசகத்தையே கவிஞரின் மனப்போக்கிற்கு விளக்கமாகக் கொள்ளவேண்டும்.

"புஷ்பமாலிகா" வில் சிகரமாய், மகுடம் தரித்து இருக்கிற பகுதி, கடைசி அத்தியாயமாகும்.

வார்த்தைகளும், உணர்ச்சியும், தத்துவமும் ஒரு சேரக்கலந்து, மனத்தையே கொள்ளைகொள்ளும் நயம் தளும்பிக்கொண்டிருக்கிறது. இனம்புரியாதஉணர்ச்சி கள் கொப்புளிக்கின்றன. ஏதோ ஒன்று அலை அலை யாய் வந்து சுழற்றுகிறது. சூறையாய் வந்து அலைக் கழிக்கிறது. வெறுமையின் கீதம் பஞ்சுப் பொதியாய், மேகமாய் வந்து படிகிறது. உணர்ச்சிப் பிரவாகத்தில் காலை மண்ணில் ஊன்றிக்கொள்ள முடியவில்லை; மிதக்கிறோம்; நீந்துகிறோம்.

மெழுகுவர்த்தி உருகுகிறது; அதைக்காட்டிலும் அதிகமாக நாம் உருகிப் போகிறோம்.

"மெழுகுவர்த்திகள் எரியட்டும்."

—என்ற வாக்கியம் திரும்பத்திரும்ப அமரகீதமொன் றின் பல்லவியாக ஒலித்து, நம்மை மெய்சிலிர்க்க வைக்கிறது.

"எரிகின்ற மெழுகுவர்த்திகளெல்லாம் எரிந்து முடிந்தபின், மீண்டும் ஏற்ற முடியாது.

தெரிந்தே அவை எரிகின்றன.

ஆசை என்னும் நெருப்பு, பாசம்—பற்று என்னும் நெருப்பு, காதல்—இரக்கம் என்னும் நெருப்பு, எந்த நெருப்போ, மெழுகுவர்த்திகள் எரிகின்றன.''

தவயோகியின் ஆத்மக் கனவாய்ச் சொற்கள் வந்து குவிகின்றன.

வார்த்தைகளில் வண்டிச் சக்கரத்தின் சுழற்சி தெரிகிறது.

சொற்களில் ஓசை கேட்கிறது. மணியும் சலங்கை யுமாய் அவை ஒலிக்கின்றன.

''எரிந்து, எரிந்து உருகுகின்றன.

உருகி ஆவியானவை போக, ஒழுகிய துணுக்கு கள் அடையாளம் காட்டுகின்றன. நானும் அப்படியே.

கடைசியாகக் கீழே விழுந்து கோலம் போடும் எனது அடையாளங்கள், மனிதர்களால் மிதிக்கப் பட்டாலும், உன்னால் மதிக்கப்படும் எனும் நம்பிக்கை யில்தான், உனது தேவாலயத்தில் எனது மெழுகு வர்த்திகள் எரிகின்றன.''

—என்பதைப் படிக்கின்றபோது எழுத்துக்கள் மங்கு கின்றன; உருகி வழிந்த மெழுகுவர்த்தியின் துளி களைத் தேடுகிறோம். மனிதத் தடங்களின் பதிவை உற்றுப் பார்க்கிறோம். எதிலும் தெளிவில்லை. காரணம் புரிகிறது. பார்வையில் திரை விழுந்திருக்கிறது. ஆமாம், நீர்த்திரை—கண்ணீர்த் திரை!

எழுத்தையும், எழுத்தை ஆக்கியவரையும் மெய்ம் மறந்து நேசிக்கிறோம்.

உயர்ந்த எழுத்தினை, எழுத்தைக் காட்டிலும் உயர்ந்த மனிதரை, ஒருசேர அந்தரங்கமாகத் தரிசித்த இனிய சுகத்தை நாம் பெறுகிறோம்.

'புஷ்பமாலிகா' எந்த அளவுகோலுக்கும், தராசிற்கும் ஈடுகொடுத்து நிற்கும் சக்தியைக் கருத்தாலும், வடிவத்தாலும் பெற்று நிற்கிறது.

பைபிளில் உள்ள சங்கீதங்கள் (Psalms) தரும் கருத்தாழமும், கவிநயமும், 'புஷ்பமாலிகா' வில் உள்ளன. தாகூரின் 'கீதாஞ்சலி' யில் உள்ள பிரார்த்தனை உருக்கம், இதில் ஆறுகப் பெருகிச் செல்கிறது.

கவிதைத் தேனில் ஊறிய இந்த வசன காவியத்தைப்போல், கருத்தாழத்திலும், உருவத்திலும், பாணியிலும், சிந்தனை வீச்சிலும் எனக்குத் தெரிந்தவரையில் தமிழில் மட்டுமல்ல; பிற இந்திய மொழிகளில்கூட இலக்கியப் படைப்புக்கள் இருப்பதாகத் தெரியவில்லை. இந்திய இலக்கியத்திற்கே வழிகாட்டுகிற புதுமுயற்சி இது என்று நாம் கொள்வதில் தவறில்லை.

இந்தியாவில், இலக்கியங்களுக்கு வழங்கும் எந்த உயர்ந்த பரிசினையும் பெறும் தகுதி இந்த இலக்கியத்திற்கு உண்டு.

ஏனென்றால்—

இது ஒரு கவிஞரின் எழுத்து மட்டுமல்ல. தனது வாழ்க்கை யாத்திரையை, ஆத்ம யக்ஞத்தை எழுத்துக்

களில் துளி சிந்தாமல் கொட்டி வைக்கும் அசுர முயற்சியின் வெளிப்பாடு.

இது வெறும் அனுபவத்தின் பட்டியல் அல்ல. அனுபவத்தை எழுத்தாய், இலக்கியமாய் ஆக்கும் சோதனை!

இது வெறும் மனச்சலனங்களின் தொகுப்பல்ல. சலனங்களுக்கு இரையான தன்னையும், சலனங்களை உள்ளடக்கிய தனது எழுத்தையும் காலத்தோடு ஒட்ட வைத்து, உருமாற்றம் செய்யும் ரஸவாத அற்புதம்!

வெறும் எழுத்துக்கள் மகாகவிகளால் அமரத்வம் பெறுகின்றன. அமர இலக்கியங்களை மரணம் அணுகுவதில்லை. கால காலங்களுக்கும் அவை நிலைத்து நிற்கின்றன.

காரணம்—

அவை காலத்திலிருந்து ஒதுங்கி நிற்பதில்லை; கால நதியில் கலந்து, அவையும் காலம் போல் ஓடிக் கொண்டிருக்கின்றன.

‘புஷ்பமாலிகா’ ஒரு மகா கவியின் அமர படைப்பு.

காலங்களுக்கு இது நிலைத்து நிற்கும்.

கால நதியில் கலந்து காலமாகவே இது ஓடிக் கொண்டிருக்கும்.

இது எனது நம்பிக்கை.

இந்த நம்பிக்கை காலத்தின் அங்கீகார முத்திரையை நிச்சயம் பெறும்.

ஏனென்றால்—

அடிப்படையும், ஆதாரமும் கொண்ட எந்த நம்பிக்கையும் சிதைவதில்லை.

எனது நம்பிக்கையில் அவை இருக்கின்றன.

இதற்கும் என்றும் சிதைவில்லை.

**என். ஆர். தாசன்**





'புஷ்பமாலிகா,' கடிதம் வார இதழில் தொடர்ந்து முடிந்ததும், வாசகர்களது விமர்சனத்தைக் கோரியிருந்தோம். ஏராளமான விமர்சனங்கள் வந்தன. வந்தவற்றுள் சிறந்ததெனக் கருதிய விமர்சனமே மேலே கண்டுள்ள மதிப்பீடு.

# புஷ்பமாலிகா

என் இறைவனே!

தலைவர்களுக்கெல்லாம் தலைவனே!

உன்னை நான் வியப்போடு பார்க்கிறேன்.

உன் சிருஷ்டிகளிலெல்லாம் இணையற்ற உன் திறமையைக் காண்கிறேன். ஒரு மகா கலைஞனின் நளினமான உள்ளமும், ஒரு மெய்ஞ்ஞானியின் தெளிந்த அறிவும், ஒரு விஞ்ஞானியின் கூரிய நோக்கும், ஒரு பேராசிரியன் நடத்தும் கல்லூரியும், உன் சிருஷ்டிகளுக்குள் ஒளிந்து கிடப்பதை நான் காண்கிறேன்.

சிறிய விதையினின்று பெரிய உருவங்கள் கிளைத்தெழும்போது, அந்த வளர்ச்சியில் பலவகையான நோக்கங்கள் மலர்வதை நான் அறிகிறேன்.

காரியங்கள் காரணங்களைச் சுட்டிக் காட்டுகின்றன.

உவமித்துக் காட்டும் திறனில் ஒரு மகா கவியின் திறமையே உன் திறமை!

இளநீரைப் பார்க்கிறேன்.

மேலே பளபளப்பு.

அடுத்து, சிக்கல் நிறைந்த நார்கள்.

அடுத்து, உறுதியான ஓடு.

உள்ளே, சுவையான தேங்காய்.

அதன் மடியில்தவழ்ந்து விளையாடும் இன்சுவைத் தண்ணீர்.

பளபளப்பில் தொடங்கி, சிக்கலாக வளர்ந்து, உள்ளம் உறுதி பெற்றதும் காயாகக் கனிந்து கருணை மழையாகப் பெருக்கெடுக்கும் ஞானத்தின் படைப்பே இளநீர்ப் படைப்பு.

பளபளப்பைக் கண்டு மயங்காதே! உள்ளே சிக்கல் இருக்கிறது.

சிக்கல்களை அறுத்தெறி! உள்ளே உறுதியான உள்ளம் இருக்கிறது.

அதன் உள்ளே உன் அறிவுப் பசியைத் தீர்க்க விருந்திருக்கிறது.

அதன் மடியில் கிடக்கும் தண்ணீரால் உன் ஞான தாகம் தீருகிறது.

இத்தகைய நோக்கங்கள் இல்லாமலா இளநீருக்கு இந்த வடிவம் வந்தது?

உடலின் மேல்தோலில் பளபளப்பு!

உள்ளே உணர்ச்சிகளைத் தூண்டிவிட்டபடி சிக்கிக் கிடக்கும் நரம்புகள், சதைக் கோளங்கள்!

ஆயினும், தூக்கி நிறுத்தித் தாங்கி நடத்த உறுதியான எலும்பு.

பின் மென்மையான உள்ளம்.

அதிலே கருணை வெள்ளம்.

ஞானத்தின் மூலமே! உன் படைப்பில் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு காரணம் உண்டு என்ற உணர்ச்சியோடு, ஒவ்வொன்றையும் நோக்கினால், எவ்வளவு தத்துவங்கள் வெளிப்படுகின்றன!

நுங்கு எனப்படுவது பனங்காய்.

அதற்கோ மூன்று கண்கள்.

புறச்சிக்கல்களை விலக்கி, மூன்று கண்களையும் திறந்தால், ஒரே விதமான சுவை.

மனிதன் இரண்டு கண்களைத் திறக்கின்றான்.

அகக்கண் ஒன்று, தோன்றாமல் தோன்றி அவன் உள்ளத்தே உறங்குகின்றது.

அந்தக் கண்ணையும் திற.

மூன்று கண்களும் ஒரே மாதிரிப் பார்க்கட்டும் என்பதுதான் பனங்காய்ப் படைப்பின் நோக்கமா?

நான் அப்படித்தான் நினைக்கிறேன்.

தட்டினால் கதவு திறக்கும் வள்ளல் வீடுகள் உண்டு;

அடையா நெடுங்கதவாய் நிற்கும் வீடுகளும் உண்டு;

தட்டிய கதவு திறக்கப்பட்டதும், உள்ளே சென்றால் கைகொள்ளும் அளவு, மடிகொள்ளும் அளவு வாரிக்கொண்டு போக, வள்ளல் வளர்த்த செல்வங்கள் உண்டு.

தடுப்பார் இல்லை! மறுப்பார் இல்லை!

வாழைக் கனியின் படைப்பு இதுதானா?

சுலபமாகக் கதவைத் திறந்து—தோலை உரித்து, வலியில்லாமல் சாப்பிடுவதற்கு ஒரு விதைகூட இல்லாமல் அதைப் படைத்த நீ, ஒரு வள்ளலின் உள்ளத்துக்கும் இல்லத்துக்கும் விளக்கம் கூறுகிறாயா?

மேலே பளபளப்பு;

உள்ளே பெருஞ்சுவை;

நடுவிலே கொட்டை!

—இது மாங்கனி.

வாழ்வில் எல்லாமே சுவையாக இருக்காது; துன்பங்களும் உண்டு.

கொட்டையைக் கடித்துப் பல்லை உடைத்துக் கொள்ளாதே!

துன்பங்களில் கிடந்து உழலாதே!

கொட்டையைத் தூக்கி எறிவதுபோல் துன்பங்களைத் தூக்கியெறி!

இல்லையேல், கொட்டையை உடைத்து உள்ளே இருக்கும் பருப்பை மருந்தாக்கிக் கொள்வது போல், துன்பங்களைப் பிழிந்து, அதிலிருந்தே உன் நோய்க்கான மருந்தைத் தேர்ந்தெடு.

இறைவா! உன் நோக்கமும் எண்ணமும் இதுதானா?

மேலே முள்;

உள்ளே சக்கை;

இன்னும் உள்ளே இனிய சுளைகள்;

அவற்றின் நடுவிலும் கொட்டைகள்.

முள்ளில் நடந்து வாழ்க்கையைத் தொடங்கு.

வழியில் தோன்றும் சக்கைகளை யெல்லாம் நீவியெடு.

இதோ சுளைகள் உன் கையிலே!

அவசரப்படாதே!

பல்லுக்கு ஆபத்து!

நிதானமாக அனுபவி!

பிறர் கண்ணை உறுத்தாதவாறு வாழ்க்கையை நடத்து.

இறைவா!

பலாப் பழத்தின் படைப்பு இப்படி ஒரு பொருளை எனக்கு உணர்த்துகிறது.

இந்தப் பொருள்களெல்லாம் நான் சிருஷ்டித்துக் கொண்ட மாயைகளாகவும் இருக்கலாம்.

மூல ஆசிரியன் நினைக்காத ஒன்றை, உரை ஆசிரியன் சொல்வது போல், நான் சொல்வதாகவும் இருக்கலாம்!

கத்தி, தோலை அறுத்துப் பழத்தைக் காட்டுவது போல், என் புத்தி பழத்தை அறுத்துப் பொருளைக் காட்டுகிறது.

காரணங்கள் இல்லாமல் காரியங்கள் உண்டா?

விதவிதமான பழங்கள்!

விதவிதமான மரங்கள்!

ரகவாரியாகப் பிரித்தால், ஒவ்வொரு ரகத்துக்கும் ஒவ்வொரு காரணம் இருக்க வேண்டும்.

இல்லையென்றால், எல்லாவற்றையும் ஒரே மாதிரியாக நீ ஏன் படைத்திருக்கக் கூடாது?

நான் உணர்கிறேன்.

ஒவ்வொரு வகையான மனிதனுக்கும் தோதாக உவமைகளைத் தேர்ந்தெடுத்து, மரங்களாகவோ, பழங்களாகவோ, பறவைகளாகவோ நீ பூமிக்கு அனுப்புகிறாய்!

எது எதற்கு உவமை என்று கண்டுபிடித்துச் சில கவிஞர்கள் பாடியிருக்கிறார்கள்.

ஆதிநாயகனே! அவை உண்மையோ பொய்யோ, கல்லிலே தோன்றிக் கலகத்தில் முடிந்து கொண்டிருக்கும் இந்த உலகம், தன் பல்லாயிரம் ஆண்டு வரலாற்றைப் பின்னோக்கிப் பார்த்தால், ஆட்டுவிக்கப்பட்ட நிலையை உணரும்!

வாழுங்காலத்தில் உணரமுடியாத மனிதர்களைப் பற்றி, பின் சந்ததிகள் உணருகிறார்கள்!

நானோ, என்னை, என் தலைமுறையிலேயே உணர்ந்துகொள்ளத் துடிக்கிறேன்.

உன் சிருஷ்டிகளிலிருந்து என் நிலையைத் தெளிவுபடுத்திக்கொள்ள விரும்புகிறேன்!

நீயே சொன்னதுபோல், காற்றில்லாத இடத்தில், நிர்வாணமான விளக்கு சலனமில்லாமல் எரிகிறது.

சலனமற்ற சிந்தனை என்னைத் தொடும்போது, நான் உன்னைப் பற்றியே சிந்திக்கிறேன்.

உன்னை அறிவதன் மூலம் என்னைக் கண்டுகொள்ள விரும்புகிறேன்.

சலனமற்ற அகல் விளக்குத்தான் கைகூப்பி உன்னை வணங்குகிறது.

ஞான மணி மண்டபமே!

வாழ்க்கை நதி எங்கு வேண்டுமானாலும் போகட்டும்.

அதன் கரையில் நின்றபடி நான் கடலைப் பார்க்கிறேன்.

என் அறிவொளியில் உன்னைக் காண முயல்கிறேன்!

உன் பாதங்களிலே என் முதல் புஷ்பத்தை ஏற்றுக்கொள்!

## 2

தெரு மூலையில், ஒரு நாய் சில குட்டிகளை ஈன்றெடுத்தது.

அதில் ஒரு குட்டியை, அதன் அனுமதியின்றி நான் எடுத்து வந்தேன்.

வீட்டிலே கொண்டு வந்து வைத்துப் பால் கொடுத்தேன்.

ஒரு நாள்...இரண்டு நாள்...பத்து நாட்கள்—

என் வீடு அதன் சொந்த வீடு ஆகிவிட்டது.

என்னை அது புரிந்து கொண்டு விட்டது.

நான்தான் அதற்கு எஜமான்.

என்னிடம் நன்றியோடு இருப்பது அதன் கடமையாகும்.

வெளியே சென்று நான் வீடு திரும்பும் போதெல்லாம், முதலில் என் வருகையை அறிந்து கொள்வது அந்த நாய்க்குட்டிதான்.

வாலைக் குழைத்து ஓடிவந்து, துள்ளி எழுந்து, நான் அமர்ந்ததும் என் முகத்தில் நக்கிக் கொடுத்து, எதையோ சொல்ல அது விரும்புகிறது.

அது என்னைப் புரிந்து கொண்டது போலவே, மற்றவர்களையும் புரிந்து கொண்டது.

'எனக்கு யாராவது ஊறு செய்துவிடுவார்களோ என்று' யாரைக் கண்டாலும் குரைக்கிறது.

வெறும் பத்து நாள்தான் நான் பால் கொடுத்தேன்.

ஆயுள் பரியந்தம், இந்த அபிமானம் அதற்கு எப்படி ஏற்பட்டது?

நன்றி என்ஞெரு கைம்மாறு.

மானிட ஜாதியில் அது இல்லாமற் போகும் போது, ஒரு நாய் அதை அறிவுறுத்துகிறது!

'நன்றி மறவாமை' என்பது பூமியில் இருக்க வேண்டுமென்பதற்காகவே, இறைவா! நீ நாயைப் படைத்தாயா?

எந்த நீதிமன்றத்தில் அது விசுவாசப் பிரமாணம் எடுத்தது?

எந்த அதிகாரி அதற்குப் பிரமாணம் செய்து வைத்தார்?

இவன்தான் உன்னல் காப்பாற்றப்பட வேண்டியவன்—

இவன்தான் உனது நன்றிக்குரியவன் என்றெல்லாம், அதற்குச் சொல்லிக் கொடுத்தவர்கள் யார்?

ஆழாக்குப் பாலிலே அந்த விசுவாசத்தைக் கலந்து கொடுத்தாயா?

என் குழந்தையை, ஒரு நாள் பக்கத்து வீட்டுக் குழந்தை அடித்துவிட்டது.

அந்தக் குழந்தையை, இந்த நாய் கடித்துக் குதறிப் பாவாடை எல்லாம் கிழித்துவிட்டது.

என்னை மட்டுமல்ல, என் குழந்தையைக்கூட யாரும் தொடாதபடி பார்த்துக் கொள்வது தன் பொறுப்பு என்று, அதற்கு எப்படித் தெரிகிறது?

அந்த நாயினுல் பேச முடியவில்லை!

அதற்கொரு வழியை நீ வைத்திருந்தால் அதனிடமே இதைக் கேட்டிருப்பேன்.

உலகத்தில் நன்றி மறக்கும் மனிதர்கள், வளர்த்தவனையே தூற்றுவார்கள் என்பதனுல், வாயைக்கட்டி நாயைப் படைத்தாயா?

இறைவா!

காக்கை ஒன்று ஒரு கவளச் சோற்றைக் கண்டால் கரைந்து கரைந்து இனத்தை அழைக்கிறது.

விருந்தோம்பலுக்கும் உறவினரைக் காப்பாற்றுவதற்கும் மனிதன் மறந்து போனுன்.

அதை, நீ காகத்தைக் காட்டி நினைவு படுத்துகிருயா?

குரங்கு தன் குட்டியைக் கூடவே வைத்துக்கொள்கிறது.

தாய்ப் பாசத்திற்கே அப்படியோர் உதாரணமா?

வேங்கை எதைக் கண்டாலும் அடித்துச் சாப்பிடுகிறது.

முதலாளித்துவத்துக்கு அது ஒரு முன்னேடியா?

கோழி வளர்க்கப்படுகிறது; ஒருநாள் கொல்லப்படுகிறது.

மனிதனிடம் அன்பு காட்டுகின்றவர்களுள் சிலர், அவனைப் பலியாக்கவே புன்னகை செய்கிருர்கள் என்பதை இப்படிச் சொல்கிருயா?

'ஒருத்திக்கு ஒருவன்' என்ற கற்பு முறையைப் புருவின் மூலம் காட்டுகிருயா?

என்னதான் முள்ளங்கியும், வடித்த கஞ்சியும், சோறுமாகப் பன்றியை வளர்த்தாலும், அடைப்பைத் திறந்தவுடன், அது மலத்தை நாடியே ஓடுகிறது,

இழிந்த குணம் படைத்த கயவர்களுக்கு, இப்படி ஓர் உதாரணமா?

எத்தனை மூட்டையை ஏற்றினாலும், ஓட்டுகிற பக்கம் ஓடுகின்ற கழுதைக்கு, அதன் எஜமானர் தீனி கூடக் கொடுப்பதில்லை.

தெருவில் கிடக்கும் காகிதத்தைத் தின்று பசியைத் தீர்த்துக் கொள்கிறது.

உழைப்புக்கேற்ற ஊதியமின்றி, உழைத்து ஓடாய்ப்போன அடிமை ஏழைகளை, இதன் மூலம் நீ உவமிக்கிறாயா?

மொழியின் துவக்கத்தைக் கிளியின் மூலமும், இசையின் தொடக்கத்தைக் குயிலின் மூலமும், கலையின் பிறப்பை மயிலின் மூலமும் நீ காட்டுகிறாயா?

சமுதாய வாழ்க்கையில் ஒற்றுமை எப்படி இருக்க வேண்டுமென்பதற்குச் செம்மறியாடுகள் உதாரணமா?

வைக்கோலைத் தின்று பாலைக் கொடுக்கும் பசு, தன் வயிற்றைக் கொண்டு சேயைக் காக்கும் தாய்க்கு உதாரணமா?

சிருஷ்டி தேவனே!

உன்னை நினைக்கும் போதெல்லாம் எனக்கு வியப்பு மேலிடுகிறது.

ஒன்றோடு ஒன்றைப் பின்னித்தான் ஒவ்வொன்றையும் படைத்திருக்கிறாய்!

உன்னோடு அடங்கிக் கிடக்கும் ரகசியங்கள் விஞ்ஞானத் தேவையைப் பூர்த்தி செய்கின்றன!

எனது ஞானப்பசிக்கும் அவை நல்லவிருந்துகளே!

வறண்ட நிலத்துக்கு மழையையும், குளிர்ந்த பூமிக்கு வெயிலையும் நீ பருவத்தில் வழங்கத் தவறும் போது, யாரையோ தண்டிக்க விரும்புகிறாய் என்றே நான் கருதுகிறேன்!

சலனங்களுக்கு ஆட்படாத சத்தியம், உன்னால் எப்போதும் காப்பாற்றப்படுகிறது!

கர்மங்களிலிருந்தே விளைவுகள்!

நன்றும் தீதும் பிறர் தர வாரா!

மனம் போல் வாழ்வு!

கால்கள் பாதையைவிட்டு விலகினால், பயணம் நினைக்காத இடத்திற்குக் கொண்டு போகிறது.

ஆதி நாயகனே!

இதில் உன்னைக் குறை கூறுவோர் மூடர்களே!

ஒரு முறை செய்த பாவம், ஏதோ ஒரு தலை முறையில் தண்டனைக்குள்ளாகிறது.

உன் சட்டங்கள் தெளிவானவை!

அவற்றை அறிந்து கொண்டவனுக்கு நிம்மதி!

மௌனத்தின் மூலம் குழப்பங்களிலிருந்து தப்புகிற அரசியல்வாதியைப் போல, தோன்றாமை மூலம் நீ தப்புவதாக நான் கருதவில்லை.

கர்மத்திலிருந்து தர்மமோ, தண்டனையோ உரு வாகும் நிலையைத் தெளிவாக உருவாக்கிய பின்பு, நீ ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறாய்!

உன்னை மனித வடிவில் படைத்தவர்களும், உனது சகல குணங்களுக்கும் வடிவம் கொடுத்துவிட்டார்கள்!

ஆண் பாதி பெண் பாதி என்பதை, சக்தி சிவனாகவும்;

ஒரு மனைவி தத்துவத்தை ஸ்ரீராமன் ஜானகியாகவும்;

பலதார லீலைகளைப் பரந்தாமனாகவும்;

—வடித்து வைத்து, படைத்தவனைப் படைத்த பாவலர்கள், தங்கள் கலைத்திறமையை வெளிப்படுத்திக் கொண்டார்கள்!

இறைவா!

உன்னை நான் நேசிக்கிறேன்.

எனது இரண்டாவது புஷ்பத்தையும் ஏற்றுக் கொள்.

# 3

உணர்ச்சிச் சூறுவளியின் மைய மண்டபத்தில் மனித ஈசல் தவியாய்த் தவிக்கிறது.

பின்னிப் பின்னித் தொடரும் ஆசைகளால், மனித உள்ளம் கண்ணுடித் துண்டுகள் போல் சிதறுகிறது.

திரும்பத் திரும்ப அதை ஒட்ட வைத்து உள்ளம் புதுப்பிக்கப்படுகிறது.

நின்ற இடத்திலேயே, வளரும் வரை வளர்ந்து, நீ வழங்கிய வயது வரை வாழ்ந்து, பட்டுப் போகும் மர மாக உள்ளமும் இருக்குமானுல், சலனங்களும் சபலங்களும் இல்லை.

வயிற்றுப்பசியை அறிவதோடும், உடல் காமத்தை அறிவதோடும்,வாழ்க்கைச் சக்கரம் முடிந்துவிடுமானுல் குழப்பங்கள் இல்லை.

அசைவன, அசையாதன, ஊர்வன, பறப்பன ஆகியவற்றிற்கில்லாத இந்த 'உள்ளம்', மனிதனுக்கு மட்டும் ஏன் வழங்கப்பட்டது?

காரியங்களைவிட நினைவுகளே மனிதனைச் சித்திர வதை செய்கின்றன.

அந்த உள்ளமும், உண்மையை, பொய்யை அறிந்துகொள்ள முடியாத உள்ளமாக இருந்து விட்டால், ஒவ்வொரு படிக்கட்டிலும் ஏமாற்றங்கள் காத்திருக்கின்றன.

ஆசை, பரபரப்பு, ஆத்திரம், கோபம், துக்கம் அத்தனை அலைகளும் இந்தச் சின்னஞ்சிறிய உள்ளத்தி லிருந்தே எழுகின்றன.

கண்கள் போக முடியாத தூரத்திற்கும் நினைவுகள் ஓடுகின்றன.

நடக்கக்கூடியதை மறந்துவிடும் உள்ளம்;

நடக்கவே முடியாத ஒன்றுக்காக ஏங்கித் தவிக்கும் உள்ளம்;

உறவுக்காகவே அழும் உள்ளம்;

பிரிவிலே கலங்கும் உள்ளம்;

வெற்றிலே மகிழும் உள்ளம்;

தோல்வியிலே துவளும் உள்ளம்;

ஒவ்வொரு தடவையும் உடைந்து உடைந்து மீண்டும் ஒட்டப்படும் இந்த உள்ளம், உறுதியாக இருந்தால், ஞானம் கைகூடும் என்கிறார்கள் ஞானிகள்.

வெய்யிலிலே சுருங்கி, மழையிலே விரியும் வாசற் கதவைப்போல், இருவேறு உணர்ச்சிகளுக்கு ஆட்படா மல், வெயில் மழை இரண்டிலும் உறுதியாக நிற்கும் மலையைப்போல் நிற்கவேண்டும் என்கிறார்கள்.

அதை நானும் முயன்று பார்த்தேன்.

இறைவா!

உன் ஆலயத்திலே முயன்று பார்த்தேன்;

கண்கள் உன்னைக் கண்டன;

கரங்கள் உன்னை வணங்கின;

உள்ளமோ, கொடுக்கவேண்டிய கடனையும் நாளைப் பொழுதையும் நோக்கிச் சென்றது.

அதைத் திரும்ப இழுத்து வந்து உன் சந்நிதியில் நிறுத்தினேன்.

உடனே கண்கள் தகராறு செய்யத் தொடங்கின.

அழகான பெண்ணொருத்தி உன்னை வணங்கு வதற்காக வந்திருந்தாள்.

என் கண்கள் அங்கே பாய்ந்தன.

அவள் கண்கள் இங்கே திரும்பின.

எல்லாம் உன் முன்னிலையிலேயே!

கண்ணை கட்டுப்படுத்தினால், உள்ளம் ஓடுகிறது.

உள்ளத்தைக் கட்டுப்படுத்தினால், கண் பறந்து போகிறது.

சரி, கண்ணை மூடிக்கொண்டு வணங்கலாம் என்று தொடங்கினேன்.

உடனே உள்ளம் தன் ஆயிரம் கைகளையும் விரித்துக் கொண்டது.

ஒவ்வொரு கையும் வாழ்க்கையின் ஒவ்வொரு மூலையைப் பிடித்து இழுத்து வந்தன.

கையினால் துடைத்தால் கையிலேயே ஒட்டிக் கொள்ளும் நூலாம்படையைப் போல்,

எதை விலக்குகிறேனோ அது வேகமாக ஓடி வருகிறது.

குழம்பிலே உப்பு அதிகமென்று தண்ணீரை ஊற்றுகிறேன்.

தண்ணீர் அதிகமாக விடுகிறது.

தண்ணீர் அதிகமென்று உப்பைப் போடுகிறேன்.

உப்பு அதிகமாகிவிடுகிறது.

நான் ஒரு நல்ல சமையல்காரன் அல்ல; எனக்குத் தெரிகிறது.

அந்தப் பக்குவத்தைப் பெறுவதெப்படி?

அடிக்கடி குடித்துப் பார்த்து உப்பிட்டுச் சமஅளவு சுவை சேர்ப்பது போல்,

அடிக்கடி உள்ளத்தை அடக்கிப் பண்படுத்திக் கொள்ள முயல்கிறேன்.

ஒழுங்கான சுவை வருகிறது.

அதே நேரத்தில், கூரையில் இருந்த பல்லி, குழம்பிலே விழுகிறது.

என்னுல் பண்படுத்தப்பட்ட உள்ளத்தில், என்னை அறியாமல் சலனம் எழுகிறது.

இறைவா!

அங்கேதான் நீ விளையாடுகிருய்.

ஆத்ம லகானை என் கையிலே பிடித்துக்கொண்டு பயணம் தொடங்கும்போது, வண்டியின் பின்பக்கத்தில் நீ ஏறி உட்கார்ந்து கொள்கிருய்.

நான் லகானை இழுக்கும் போது நீ என்னை இழுக்கிருய்.

பயணமோ என்னுடையது;

பாதையோ நீ விரும்பியபடி!

இதற்குத் தப்பியவர்கள் எவரையும் நான் காண வில்லை.

மனிதனை உன் இஷ்டம்போல் ஆட்டிவைப்ப தற்குத்தானே இந்த உள்ளத்தை நீ படைத்தாய்?

உள்ளத்தை ஒருமுகப்படுத்திவிட்ட எந்த ஞானி யையும், கலைத்து வேட்டையாடத்தானே, புலன் உணர்ச்சிகளைப் படைத்தாய்?

உனது பாவைக் கூத்து அற்புதமானது.

நீ கட்டிய உலகத்தில் விழுவதற்கு ஏராளமான பள்ளங்கள் உண்டு.

விழாமல் நடக்கக் கூடிய கால்கள் இல்லை.

ஆயிரக்கணக்கான ஆப்பிரிக்கப் பாம்புகளை வளர்த்த அமெரிக்கப் பெண்ணொருத்தி, இந்திய நாகம் கடித்து இறந்து போனாளாம்.

அவளது முடிவு இந்தியாவிலிருந்து ஏற்றுமதி யாகி இருக்கிறது!

எந்தக் கால், எந்தப் பாறையில் வழுக்கும் என்பது உனக்கு மட்டுமே தெரியும்.

நீ படைத்த உள்ளம் கோடானுகோடி ஆசைகளைக் கண்டுகொண்டது; உன் குறிப்புப் புத்தகத்தைக் காண முடியவில்லை.

மழை வருவதும் புயல் வருவதும் விஞ்ஞானிக்குத் தெரியும்; மரணம் வருவது தெரிவதில்லை!

இடியாப்பம் போல் உள்ளத்தைப் படைத்துவிட்டு, அதன் தலைப்பைத் தேடுகிற பொறுப்பை எங்களிடம் கொடுத்திருக்கிறாய்.

ஓர் அலை கரையேறினால் மறு அலை பின்னாலேயே வருவதுபோல்,

'அப்பாடா, அமைதி' என்று உட்காரும்போது, அடுத்த கேள்வி கதவைத் தட்டுகிறது.

பற்று, பாசம், பந்தம் எல்லாமே அற்றுப்போய் ஒரு மூலையில் அமர்ந்தால், வயிறு, தான் இருப்பதை நினைவுபடுத்துகிறது.

யானைக்குத் தப்பினால் கரடி பாய்கிறது.

கரடிக்குத் தப்பினால் காட்டாறு குறுக்கிடுகிறது.

இந்த உள்ளத்துக்கு எங்கே நிம்மதி?

ஒரே ஒரு நிம்மதி!

'மரணம் அடுத்த எல்லை; மனதுக்கு ஏன் தொல்லை?'

—என்று முடிவு கட்டிவிட்டால் குழப்பத்துக் கிடையே ஒரு தெளிவு; சஞ்சலத்துக்கிடையே ஒரு சந்தோஷம்—அவ்வளவுதான்.

விடிவுக்கும் இரவுக்கும் நடுவே நிற்கும் தேவனே!

அந்த நிம்மதியோடு உன்னைப் பிரார்த்திக்கிறேன்.

மரணத்திற்குப் பிறகு நான் உன்னைச் சந்திக்கப் போகிறேனா என்பது எனக்குத் தெரியாது.

உன்னைச் சந்திப்பதாகவே வைத்துக்கொண்டு, முன்கூட்டியே உனக்கு விண்ணப்பித்துக்கொள் கிறேன்.

இங்கே நான் செய்த எல்லாத் தர்மங்களுக்கும் என் உள்ளம்தான் காரணம்.

நான் செய்த பாவங்களுக்கும் அதுதான் காரணம்.

இந்த உள்ளம் என்பது எனக்கு வந்ததற்கு நீதான் காரணம்.

ஆகவே,

என் தர்மங்களையும், பாவங்களையும் உன் கணக்கிலேயே வரவு வைத்துகொண்டு, நான் உன்னைச் சந்திக்கும்போது, என்னை மன்னித்துவிடு.

அதற்குக் காணிக்கையாக, இந்த மூன்றாவது புஷ்பத்தையும் ஏற்றுக்கொள்.



# 4

அரைகுறையாக முடிக்கப்பட்ட கட்டடம்,

ஒரு புதிய குட்டிச் சுவர்.

செம்மையாகச் செதுக்கப்பட்ட கல்;

ஒரு புதிய சிற்பம்.

அரைகுறையாக வேளாண்மை செய்யப்பட்ட நிலம்.

களை மண்டிய காடு.

செம்மையாகப் பண்படுத்தப்பட்ட நிலம்;

செழுமையான தோட்டம்.

முழுமை பெற்ற பழமைக்கும் பெருமை;

முழுமையில்லாத புதுமை, சிறுமை.

நான் யார்?

நானோர் அரைகுறைக் கட்டடம்;

முறையாகப் பயன்படுத்தப் படாத நிலம்;

பாதி வெந்த சோறு;

மண் கலந்த தங்கம்;

முழுமையில்லாத இந்த மனிதனுக்குத் தினந் தோறும் மாறுபட்ட உணர்ச்சிகள் அதிகம்.

'இந்த உலகமே நம் கையில்' என்பதுபோல், இவனது ஒருநாள் பொழுது விடிகிறது.

'இன்று என்ன செய்யப் போகிறேமோ?' என்ற கோழைத்தனத்தோடு மறுநாள் பொழுது விடிகிறது.

ஒருநாள், நம்பக் கூடாதவனை நம்பிக் கெடுகிறது;

மறுநாள், நம்பிக்கைக்கு உரியவனைப் பிரிந்து தவிக்கிறது.

படத்திலே கதாநாயகி அழுதால், இவனது கண்களில் கண்ணீர் வருகிறது.

இது கதைதானே என்று நினைக்கிறான்.

ஆயினும், உணர்ச்சி நரம்பு கொதித்து உருகுகிறது.

இந்த மனோவியாதிக்காரனுக்கு, இறைவா, நீ சில வரங்களை அருள வேண்டும்.

இனி, பகைவர்கள் வேண்டாம்; நண்பர்களைக் கொடு.

முட்கள் வேண்டாம்; மலர்களைக் கொடு.

மூடர்களை நெருங்கவிடாமல் அறிஞர்களை நெருங்கச் செய்.

இவனது ஆடைகளே இவனைப் பகைக்காமல் காப்பாற்று.

பரந்த வானத்தில் இவனொரு வெண்ணிலவாக இல்லாவிட்டாலும், நட்சத்திரமாகவாவது மின்னவிடு.

இது நஞ்சு, இது அமுது எனப் பேதங்காட்டு.

இவனது வாக்கியங்களில் நீ வார்த்தையாக வந்து நில்,

இவனது கண்களுக்கு நீயே ஒளியாய் இரு.

எப்போதாவது அந்தக் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தால், அதைத் துடைக்கின்ற கையாகவும் நீயே இரு.

ஊமை உள்ளத்தின் உணர்ச்சிக் காட்டாறு கட்டுப் படுத்தப்பட வேண்டிய நேரத்தில், அணைக்கட்டாக நின்று காப்பாற்று.

சினந் தணிந்த மனிதனாக,

இனந் தெரிந்த மனிதனாக,

மனந் தெளிந்த ஞானியாக—இவனை மாற்று.

பிறப்புக்குப் பொறுப்பானதுபோல், நடப்புக்கும் பொறுப்பேற்றுக்கொள்.

பாதி முடிக்கப்பட்ட இதே கட்டடத்தில், அதாவது, புதிய குட்டிச் சுவரில், எத்தனையோ கழுதைகள் குடியிருந்திருக்கின்றன.

காலந் தாழ்ந்துதான் அவை கழுதைகள் என்று அறிந்து கொள்ள முடிந்ததென்றால், இவனது ஏழை அறிவை இதற்குமேல் எப்படி உரைப்பேன்?

ஆமைக்குக னமான ஓடு கொடுத்த உன் கருணையான உள்ளம்,

இந்த ஏழைக்கு ஏன் இவ்வளவு மென்மையான உள்ளத்தைக் கொடுத்தது?

மூல முதல்வனே!

மூலம் புரிந்துவிட்டால் உரை எதற்கு?

உண்மை தெரிந்துவிட்டால் பிரார்த்தனை எதற்கு?

விளக்கம் தெளிவாக இருந்தால் விவாதங்கள் எதற்கு?

நீ எனக்குச் சரியான வழி காட்டினால் இந்த வேதனையும், வேண்டுகோளும் எதற்கு?

காலிலே குத்திய பின்பு, 'இதுமுள்' ளென்று நெஞ்சு சொல்லுகிறதே, அது குத்துவதற்கு முன்பு கண் சொல்லிவிடக் கூடாதா?

அனுபவ விளைவுகளை அறிவின் விளைவாக ஆக்கித்தரக் கூடாதா?

நான், நடந்து வந்த பாதைகளைத் திரும்பிப் பார்க்கிறேன்.

என் வாழ்க்கையின் ஒவ்வொரு ஆண்டிலும், என் குதிரை ஊருக்குப் 'பக்கத்தில்' வரும்போது, நானே காட்டுக்குள் துரத்தியிருக்கிறேன்.

பல நேரங்களில், தவறான முடிவுகளைச் சந்தோஷ மாக மேற்கொண்டு, அனுபவ விளைவாகத் தண்டனை களை ஏற்றுக் கொண்டிருக்கிறேன்.

கடலிலிருந்து நீரை வாங்கிய மேகம், ஏதோ ஒரு பூமியிலே அதைத் துளிகளாகச் சிந்துகிறது.

அந்தத் துளிகள் ஒன்றுகூடி ஏதோ ஒரு குளத் திலே சங்கமிக்கின்றன.

அவை புறப்பட்ட இடமெங்கே, புகுந்த இட மெங்கே?

நீ மட்டும் முன் கூட்டி அறியக்கூடிய ரகசியம் இது.

என் நிலையும் அதுதான்.

புறப்படுவது மட்டும்தான் எனக்குத் தெரிகிறது.

புகுந்த பிற்பாடுதான் 'எங்கிருக்கிறோம்' என்பது புரிகிறது.

நாற்பத்து மூன்று வசந்தங்களையும், கோடைகளையும் பார்த்த பிறகும்கூட,

வாழ்க்கையில் எது வசந்தம், எது கோடை என்று புரியவில்லை

ஒரே ஒரு அறிவை மட்டும் தெளிவாகக் கொடுத்து விட்டு, பாக்கி அத்தனையையும் என்னிடமிருந்து பறித்துக்கொண்டு, இந்தப் பூமிக்கு என்னை அனுப்பி வைத்த பரம்பொருளே!

உன் கட்டளைப்படி, ஒரு தாயும், தந்தையும் செய்த முட்டாள்தனத்தில் பிறந்த ஒரு ஜீவராசி, தான் நீரில் வாழும் இனமா, நிலத்தில் வாழும் இனமா என்று தெரியாமல் தவிக்கிறது.

இது என்ன குற்றம் செய்தாலும், அது நீ செய்த குற்றமே!

இது இனிச்செய்யப்போகும் குற்றங்களையும், உன் கணக்கிலேயே வரவு வைத்துக் கொண்டு, இந்த

நாலாவது புஷ்பத்தையும் ஏற்றுக்கொள்,

# 5

ஒரு பையனைத் தந்தை கேட்டார்:

"தம்பி! மீன்கள் நீரிலே வாழ்வது உனக்கு ஆச்சரியமாகத் தோன்றவில்லையா?"

பையன் சொன்னான்:

"அது ஆச்சரியமில்லை, அப்பா! தான் வாழ்ந்த நீரிலேயே அது கொதித்துக் குழம்பாகிறதே, அது தான் ஆச்சரியம்!"

இறைவா! மனிதனுக்கு நீ எண்ணங்களை வைத்ததில் ஆச்சரியமில்லை. அந்தஎண்ணங்களிலேயே அவன் வெந்து வெந்து அழிகின்றானே, அதுதான் ஆச்சரியம்!

எண்ணங்களே காரியங்களாகின்றன;

காரியங்களே அனுபவங்களைச் சேகரிக்கின்றன.

நிகழ்ச்சிகளுக்குப் பின்னாலும் நினைவுகள்;

விளைவுகளுக்குப் பின்னாலும் விளக்கங்கள்.

நீயே ராமாவதாரத்தில், பொய்மான் எது, உண்மை மான் எது என்று தெரியாமல், சீதையைப் பறி கொடுத்தாய்.

கற்பின் செல்வி அகலிகை--உண்மைக் கணவன் போலிக் கணவன் என்ற பேதம் தெரியாமல், கற்பைப் பறி கொடுத்தாள்.

சூதாடியபின் புத்தி பெற்ற தருமன்;

சூதாட்டத்திலேயே உதவிக்கு வராமல், காரியங்களை முற்றவிட்டு, பாண்டவர்களைக் காடு போக வைத்து, பாஞ்சாலியைத் துகிலிழக்கவிட்டு, போர்க்களத்தில் வெற்றிதேடித்தந்த உன் கிருஷ்ணுவதாரம்;

சீதையைச் சிறையெடுத்த பின்னரே, முறையறிந்த ராவணன்;

தாசி வீடு சென்று ஆடிக்களித்த பின்பே, தன் புத்திக்கு மீண்ட கோவலன்;

உறவினரால் துன்பப்படுத்தப்பட்டு, காலங்கடந்த பின் ஞானப்புலம்பல் புலம்பிய பட்டினத்தார்;

ஆடாத ஆட்டமெல்லாம் ஆடி, நோய் நாடி, அறிவு பெற்ற அருணகிரிநாதர்;

மனைவியின் தீய ஒழுக்கத்தால் ஞானியான ராஜா பர்த்ருஹரி;

—அனுபவம் எத்தனை பேருடைய படங்களைத் தன் மாளிகையில் மாட்டி வைத்திருக்கிறது.

அனுபவங்களைக் கொள்முதல் செய்வதில் அவதாரங்களே தப்பவில்லை என்றால், மனிதர்கள் எம்மாத்திரம்!

உபநிஷக் கதைகளெல்லாம் அனுபவத்தின் மகிமையைக் கூறும் ஓவியங்களல்லவா?

எண்ணங்கள் எப்பொழுதுமே சீரான வழியில் சென்றால், அனுபவங்கள் இல்லை.

அனுபவங்கள் இல்லையென்றால், மனிதன் வெறும் ஜடம்.

ஆகவேதான், எண்ணங்களில் வெந்து வெந்து அவன் அனுபவங்களைப் பெற வேண்டுமென்பது உன் ஆணைபோலும்!

மலைகளுக்கும், மரங்களுக்கும் வயது உண்டு; அனுபவமில்லை.

மனிதர்களுக்கு மட்டுமே அனுபவமுண்டு.

முன்னால் போகும் ஆட்டுக்குட்டியின் அனுபவம், பின்னால் வரும் ஆடுகளுக்குப் பாடம்.

முன்னுள் மந்திரிகளின் அனுபவம், பின்னால்வரும் மந்திரிகளுக்கு எச்சரிக்கை.

பிறரது அனுபவங்களிலிருந்து பாடம் பெற்ற பிறகாவது, சுயதரிசனம் பூர்த்தியாகிவிடுகிறதா?

இல்லை!

சுயமாகவும் கொள்முதல் செய்ய வேண்டும்.

முனிவனுக்குத் தன் மனைவி அகலிகைமீது ஏற்பட்டிருந்த சந்தேகத்தைத் தீர்த்து வைத்த ராமன், உத்தரகாண்டத்தில் தன் மனைவியின்மீதே சந்தேகப் படவில்லையா?

கோபியர்களின் சேலைகளை மறைத்து வைத்து விளையாடிய கோபாலன், அதே சேலையைப் பாஞ்சாலி இழந்தபோது பதறவில்லையா?

'சுயதரிசனம்' என்பது அவதாரங்களுக்கும் தேவைப்பட்டது.

அனுபவங்களைக் கொள்முதல் செய்ததன் மூலமே அது நிறைவேறியது.

என்னென்ன காய்கறிகளைச் சாப்பிடலாமென்பது எனக்குத் தெரியும்.

ஆனால், எதைச் சாப்பிடக்கூடாது என்பதைக் கண்டுகொள்ள, எனக்கு முன்னால் யார் யாரோ செத்திருக்கிறார்கள்.

அவர்கள் செத்ததைப் பார்த்தபிறகு, 'அந்தக் காய்களைச் சாப்பிடக்கூடாது' என்று மற்றவர்கள் கண்டு கொண்டிருக்கிறார்கள்.

சிலரது அனுபவம் பல உயிர்களைக் காப்பாற்றி யிருக்கிறது.

எத்தனை கதைகள்!

நீயே சம்பந்தப்பட்ட எத்தனை வேதங்கள்!

எத்தனை காவியங்கள்!

அனைத்திலும் அனுபவத்தின் விளைவுகளே முன் நிற்கின்றன.

ஆனால், எந்தக் கதையிலும் காவியத்திலும், புதிய புதிய அனுபவங்களையே ஒவ்வொருவரும் கண்டிருக் கிறார்களே தவிர, ஒரே அனுபவத்துக்குப் பல பதிப்பு களை வெளியிட்டதில்லை!

இந்தப் பூமியில், பல்லாயிரம் ஆண்டுகளில், அதற்காகப் பிறந்தவன் நான் ஒருவன்தான்!

மலத்திலே ஒரு காலை வைத்து, அது மலமென்று தெரிந்த பின்பும், பிரக்ஞையின்றி மறு காலையும் தூக்கி வைத்தவன் நான் ஒருவன்தான்!

பிரபவ வருஷம், ஆவணி மாதம், ஏழாம் தேதி ஒரு மனிதன் என் கன்னத்தில் அடித்துவிட்டான்

என்றால், அடுத்த வருஷம், அதே மாதம், அதே தேதியில், அதே மனிதனிடம், அதே கன்னத்தில் அடி வாங்குவேன்.

என் அனுபவங்கள் ஆண்டுதோறும் புதுப்பிக்கப் படுகின்றனவேயன்றி, அவை புதிய அனுபவங்களாக இல்லை.

கொக்குக்கு ஒரே மதி.

உயரமான மனிதர்களுக்கும் அதுதானே விதி!

இடிகூட ஒருமுறை விழுந்த இடத்தில் மறுபடியும் விழுவதில்லை;

ஆனால் என் அனுபவமோ பட்ட இடத்திலேயே படுகிறது.

ஒருவகையில் அதுவும் லாபமே!

புதிய புதிய இடங்களில் பட்டால் வலி தெரிந்து கொண்டே இருக்கும்.

ஒரே இடத்தில் பட்டால் அந்த இடம் மரத்துப் போய்விடுகிறதல்லவா!

நெய்யையே ஆகாரமாகக் கொண்ட எறும்பு அந்த நெய்யிலே விழுந்துவிட்டால், அதற்கு அதுவே மரணப்படுக்கையாகி விடுகிறது.

தேனையே உணவாகக்கொண்ட தேனீ, தேன் குடத்தில் விழுந்துவிட்டால், அதுவே அதன் சமாதியாகி விடுகிறது.

என் கதையும் அதுதான்!

நான் அன்பை நேசிக்கிறேன்;

அதிலேயே மூழ்கி அழிகிறேன்.

என் சவக்குழியை நானே தோண்டுகிறேன்.

'ஏன் நான் இப்படியெல்லாம் செய்கிறேன்' என்று எண்ணிப் பார்க்கும்போதுதான், என்னுடைய லகான் உன் கையில் இருப்பதாக உணருகிறேன்.

ஆகவே, நீ துரத்துகிற பாதையிலேதான், நான் போய்க் கொண்டிருக்கிறேன்.

நான் விழுந்தால் அது உன்னாலே

நான் எழுந்தால், அது உன்னாலே!

என்னுடைய எழுச்சியையும் வீழ்ச்சியையும் உன்னுடையதாக வரவு வைத்துக்கொண்டு, இந்த ஐந்தாவது புஷ்பத்தையும் ஏற்றுக்கொள்!

## 6

அழகில்லாத உருவங்களை ஒதுக்காதீர்கள்;

அதற்குள்ளே 'ஆத்மா' தவித்துக்கொண்டிருக்கிறது.

அழகான உருவங்களுக்காக ஏங்காதீர்கள்;

அங்கே 'ஆணவம்' தலை தூக்கி நிற்கிறது.

வறுமையாளனைக் கேலி செய்யாதீர்கள்;

அங்கே 'வாழ்க்கைத் தாகம்' உங்களை வணங்கிக் கொண்டிருக்கிறது.

பணக்காரன் வீட்டுப் படிக்கட்டில் ஏறாதீர்கள்.

அங்கே 'அவமரியாதை' உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது.

மேதைகளை உச்சி குளிரும் அளவுக்குப் புகழாதீர்கள்;

அந்த 'மேதைத்தனம்' அத்தோடு முடிந்துவிடுகிறது.

குரூபியை அழகான கண்களோடு பாருங்கள்.

வறுமையாளனைப் பணக்கார உள்ளத்தோடு சந்தியுங்கள்.

தற்குறியின் அறிவை ஞான திருஷ்டியால் உணருங்கள்.

ஒன்றிலிருந்து ஒன்றைக் கண்டுபிடியுங்கள்.

அதுபோலவே,

நரகத்தில் இருப்பவர்கள் நரகத்திலேயே சொர்க்கத்தை அமைத்துக் கொள்ளுங்கள்.

தாமரையின் தண்டையும் வேரையும்விட அதன் புஷ்பம் பெரியது.

தன் அளவுக்கு மீறிய புஷ்பத்தை வெளியிடும் சக்தி அதற்கிருந்தது.

கொடுமையான நரகங்களிலும் சொர்க்கங்கள் முளைத்தெழ முடியும்.

மனம்தான் காரணம்.

குருவியின் வீட்டு வசதியை அதன் கூடு நிறைவேற்றுகிறது.

அந்தக் கூடு உன் கண்ணுக்குத்தான் அழகாயில்லை; குருவிக்கு அழகாயிருக்கிறது.

பிறர் கண்ணுக்கு உன் காட்சி வெறும் கண் காட்சியே!

உன் கண் உன்னையே கண்டு, அதை உன் மனச்சாட்சியும் ஒப்புக்கொண்டு விட்டால், உன் வரையில் உன் ராஜாங்கம் மிகவும் பெரியது.

தாயின் கர்ப்பம் தந்தையால் வருவது.

ஆனால், குழந்தையின் உருவம் கரு உருவாகும் போது, எதிர்ப்படும் தோற்றத்தைப் பொறுத்தது.

அது நிறைவேறுவது உன் முயற்சியையும், காலம் உனக்களிக்கும் பரிசையும் பொறுத்தது.

தேவை கடலளவு;

கிடைத்தது கையளவா?

மெத்தச் சரி;

இப்போது உன் கைதான் கடல்.

எதிர்பார்ப்பது அதிகமானுல், கிடைப்பது குறை வாகவே தோன்றும்.

கிடைத்தது குறைவென்றெண்ணிஞல், கிடைத் தது பயனின்றிப் போகும்.

ஆசை என்பது வேரில்லாமல் தினமும் வளரும் கொடி.

அது எந்தக் கட்டத்திலும் நிற்பதில்லே.

எங்கே 'இது போது'ம் என்ற நிம்மதி உனக்கேற் படுகிறதோ, அங்கே உன் சொர்க்கம் அமைந்துவிடு கிறது.

உபநிஷத்தில் ஒரு கதை:

ஒரு முனிவனே ஒருவன் அவமதித்துவிட்டான்.

'அவன் பன்றியாகக் கடவது' என்று முனிவன் சபித்து விட்டான்.

அந்த மனிதனுக்குக் கவலே வந்தது.

மகனே அழைத்தான்.

'மகனே' நான் பன்றியான சில மாதங்களில், நான் எங்கிருந்தாலும் கண்டுபிடித்துக் கொன்றுவிடு' என்று கட்டளேயிட்டான்.

ஆறு மாதங்கள் கழிந்தன.

மகன் தந்தைப் பன்றியைத் தேடி அலைந்தான்.

ஒரு சாக்கடையில் அதனைக் கண்டான்.

அந்தப் பன்றி ஒரு பெண் பன்றியைச் சேர்த்துக் கொண்டு, சில குட்டிகளை ஈன்றிருந்தது.

மகன் அதை வெட்டப் போனான்.

உடனே தந்தைப் பன்றி தடுத்துச் சொல்லிற்று!

'மகனே, என்னைக் கொல்லாதே! இப்பொழுது இந்த வாழ்க்கையே எனக்குப் பிடித்தமான வாழ்க்கை யாகிவிட்டது! இவள் உன் அம்மா, இவர்கள் உன் சகோதரிகள்!'

—மகன் தலைகுனிந்து திரும்பினான்.

விரும்பியது அமையாவிட்டால், அமைந்ததை விரும்பு.

தெருவோரத்துச் சாக்கடை நிரம்பி வழிந்து பூந்தோட்டத்துக்குள் புகுந்துவிட்ட தென்பதால், பூந்தோட்டம் ஓடிப்போய்க் கடலில் விழ முடியாது.

பிறப்புக்குச் சில நோக்கங்கள் உண்டு.

அந்த நோக்கங்கள் எந்த அளவு, உன் வாழ்க் கையில் நிறைவேறுகின்றதோ, அந்த அளவுதான் ஆண்டவன் உனக்கு ஒதுக்கிய அளவு.

உனது கடுமையான முயற்சிகள், புரட்சிகளுக்குப் பின்னாலுங்கூட, மொத்தத்தில் நீ அனுபவிக்கும் வாழ்க்கை, வானவீதியில் உனக்கென அமைக்கப்பட்ட பங்கு.

நான் நரகத்தில் சில நாள்கள் இருந்து சொர்க்கத்தைக் கற்பனை செய்திருக்கிறேன்.

பிறகு சொர்க்கத்துக்குள் நுழைவதாக நினைத்துக் கொண்டு, நரகத்தின் மறு பகுதிக்குள் நுழைந்திருக்கிறேன்.

ஆனால், எங்கே நுழைந்தாலும், 'அதுதான் சொர்க்கம்' என்றெண்ணி அமைதி கொண்டிருக்கிறேன்.

துயரங்களில் மூழ்கி சமாதியாகாமல் உன் கடமைகளை நீ நிறைவேற்றியாக வேண்டும்.

சில காரியங்கள் உனக்குக் கட்டளையிடப்பட்டிருக்கின்றன.

நீ இழுத்துவாங்கி வெளியேவிடும் மூச்சு எவ்வளவு தூரம் போகிறதென்று உனக்குத் தெரியாது.

ஆனால் மூச்சுதான் உன் உயிர்.

உன் கடமையின் விளைவுகள் எப்படி இருக்குமென்று உன்னால் இன்று கண்டுகொள்ள முடியாது.

ஆனால், உன் மரணம் அவற்றைப் பேசும்.

நீ வாழ்ந்ததற்கு ஒரு நியாயம் கிடைக்கும்.

உன்னைப் பற்றும் நெருப்பிலே உன் நரகமும் எரிந்துவிடும்.

பிறகு, புகழ் என்னும் சொர்க்கம் ஆண்டுதோறும் பூமாலை போடும்.

இறைவா, இவை நான் சொல்பவை.

ஆனால், இவைதானே உன் கட்டளைகளில் சில.

நான் ஏற்றுக்கொள்கிறேன.

எனது ஆறுவது புஷ்பத்தை நீ ஏற்றுக்கொள்.

# 7

மழை கனமழையாகப் பெய்து நின்றது.

வெள்ளம் வடிந்து கொண்டிருந்தது.

ஆங்காங்கு கொடிகள், மரங்கள், செடிகளின்மீது துளித்துளியாகத் தேங்கிநின்ற மழை வெள்ளம் முத்துகள்போல் காட்சியளித்தன.

முதிர்ந்த கிழவியின் முகம்போல வெள்ளம் வழிந்தோடிய மணற்பாங்கான பூமி—திரை விழுந்து காட்சியளித்தது.

அந்த மழையையோ, மரம் செடி கொடிகளையோ; மணற்பாங்கான பூமியையோ, மனிதன் உண்டாக்கவில்லை!

பின்பு அவன் யாரோ?

கண்ணுக்குத் தெரியாத சிறிய சிறிய பூச்சிகள்—

அவை பறக்கின்றன.

அவை உண்ணுகின்றன.

விதவிதமான பறவைகள் வகை வகையாகச் சத்தம் போடுகின்றன.

அணில்கள் துள்ளிக் குதித்து விளையாடுகின்றன.

மரக்கிளையில் சிட்டுக் குருவிகள் காதல் சுகத்தை அனுபவிக்கின்றன,

அவற்றையெல்லாம் மனிதன் படைக்கவில்லை—

பின்பு அவன் யாரோ?

கோடை வெயிலில் வெடிப்புப்பட்டுக் கிடந்த குளங்கள், ஏரிகள், மழை வள்ளத்தால் புத்துயிர் பெறுகின்றன.

காய்ந்து கிடந்த மீன் சினைகளுக்கு உயிர் வருகிறது.

பத்து நாள்களுக்குள்ளேயே கூட்டம் கூட்டமாக மீன்கள் பெருகுகின்றன.

அவற்றை மனிதன் கொண்டுவந்து விடவில்லை,

பின்பு அவன் யாரோ?

காதல் களியாட்டத்தில், ஒருநாள் ஆணும் பெண்ணும் மேல் மூச்சுவாங்கச் சிற்றின்பத்தை அனுபவிக்கின்றார்கள்.

ஒரு துளி விந்து பரிமாறப்படுகிறது.

அதிலிருந்து கைகள், கால்கள், கண், மூக்கு, செவி, வாழைத்தண்டு போன்ற உடம்பு, உள்ளே உயிரோட்டத்தோடு சிருஷ்டிக்கப்படுகிறது.

பத்து மாதம் என்று ஒரு கணக்கு வரையறுக்கப் படுகிறது.

பத்தாவது மாதம் தாயின் இடுப்பு உதைக்கப்படுகிறது.

சிருஷ்டி முழு வடிவத்தோடு வெளியில் வந்துவிடுகிறது.

ஒரு துளி விந்துவோ தகப்பன் வழங்கியது.

உருவம் அவன் செய்ததல்ல.

பின்பு அவன் யாரோ?

விதைக்குள்ளே மரம்; மரத்துக்குள்ளே மலர்கள். கனிகள்!

காலத்தால் வளர்ச்சி.

வளரும்வரை கண்ணுக்குத் தெரியாமல், அதை மறைத்து வைத்தவன் மனிதனல்ல!

பின்பு அவன் யாரோ?

அவனைக் கண்டுபிடிக்க நான் முயல்கிறேன்.

இசைத்தட்டில் மறைந்திருக்கும் சங்கீதத்தை ஓர் ஊசிமுனை வெளியே கொண்டு வருவதுபோல், உலகத்திலே மறைந்து கிடக்கும் அந்த மர்ம நாயகனை இந்தச் சிறிய உள்ளம் காட்டிவிட முயல்கிறது.

வீணையிலிருந்து ஓசை கிளம்புவது காதுக்குக் கேட்கிறது; கண்ணுக்குத் தெரியவில்லை!

என் ஆத்மா அவனை உணர்கிறது; புறக்கண்களுக்கு அவன் கிடைக்கவில்லை!

சிரிக்கும்போது அவன் நினைவு வருவதில்லை;

அழும்போது வருகிறது.

துயரங்களில் மட்டும் அவன் தோற்றங் கொள்வானேன்?

எரிகின்ற நெருப்பிலே மட்டும் அவன் வடிவம் எடுப்பானேன்?

பூஜ்ஜியத்திலிருந்து கொண்டு இந்த ராஜ்ஜியத்தை ஆளும் அந்த நாயகன், உணர்த்துவதன் மூலமே உணரப்படுகிருன்.

அவன் இரவை உண்டாக்குகிருன்: நான் தூங்குகிறேன்.

அவன் விடிய வைக்கிருன்; நான் விழிக்கிறேன்.

அவன் அடிக்கிருன்; நான் அழுகிறேன்!

அவன் தட்டிக் கொடுக்கிருன்; நான் சமாதானமடைகிறேன்!

மலேகளேயும் கடலேயும் கண்டு பிரமிக்கும்போது, அவனது பிரமாண்டமான உருவம் தெரிகிறது.

நாஸ்திகனுக்கு இல்லாத அந்த ரசனேயை, ஆஸ்திகன் மட்டுமே பெறமுடியும்!

நான் ஆஸ்திகஞக இருப்பதில், கலே உணர்ச்சி வளருகிறது; ரசனே மலர்கிறது!

மதுவின் போதையிலும், மாதர் சுகத்திலும் இறைவனின் சுருதி லயமே வெளிப்படுகிறது.

நட்சத்திரங்களுக்கிடையே சந்திரனேப்போல், பல சிந்தனேகளுக்கிடையே அவனேப்பற்றிய சிந்தனே ஒளி வீசுகிறது.

அந்த அலேகளுக்கு ஓய்வில்லே!

அந்தத் தென்றல் தூங்குவதில்லே!

சிற்றின்பம் பேரின்பத்திற்கு அப்பாற்பட்டதென்பார்கள் ஞானிகள்,

இல்லை!

சிற்றின்பமே பேரின்பத்துக்கு மூலம்!

அழகான பெண்ணின் திரண்ட உடல், அவனது கோயில்!

அவளது கனிவாய் மழலை, அவனது ஆலய மணி ஓசை!

அந்த மார்பகங்களே அவனது கோயில் கோபுரத்தின் கலசங்கள்!

மதுக்கோப்பை தீபாராதனைத் தட்டு!

முதலில் அந்த அழகுத் தெய்வத்துக்கு நான் தீபாராதனை காட்டுகிறேன்.

பிறகு நான் பக்தி செய்கிறேன்.

மோகலாகிரியில் மூச்சு வாங்கும்போது, முத்தாய்ப்பின் பரிபூரணத்துவத்தை உணருகிறேன்.

இறைவனின் படைப்பில் ரகசியங்களும், சுகங்களும், எங்கெங்கே வைக்கப்பட்டிருக்கின்றன என்பதை உணர்ந்து கொள்கிறேன்.

படைப்பின் நோக்கத்தை நான் உணர்ந்து கொண்டு விட்டதால், சிற்றின்ப வாழ்வுக்கும், பேரின்ப ஞானத்துக்கும் நான் பாலமாகி விடுகிறேன்.

நான் வாழ்ந்துகொண்டே இறைவனைக் காணுகிறேன்.

பக்தி செலுத்திக் கொண்டே வாழ்க்கையைத் தேடுகிறேன்.

அர்த்தமுள்ள அவனது படைப்புகளை, அதே அர்த்தத்தோடு பார்த்து, அதே அர்த்தத்துக்காக வாழ்கிறேன்.

அந்த வகையில், என் வாழ்க்கை சரியா தவறு என்பதைச் சொல்ல, இந்தப் பூமியில் எவனும் இன்னும் பிறக்கவில்லை.

மரணத்திற்குப் பிறகு இந்த ஏடுகள் திறக்கப் பட்டுக் கணக்குகள் பரிசீலிக்கப்படலாம்.

அப்படிப் பரிசீலிக்கும்போது, என் காரியங்கள் பரிசுக்குரியவை என்றால், இறைவா! அந்தப் பரிசைப் பெற வேண்டியவன் நீயே!

அவை தண்டனைக்குரியவை என்றால், தண்டனைக் குரியவனும் நீயே.

அவை பரிசீலிக்கப்படும் முன்னால், இந்த ஏழாவது புஷ்பத்தையும் ஏற்றுக் கொள்.

# 8

சுடுகாட்டு மண்ணில் படிந்து கிடக்கும் எலும்புக் கூடுகள், ஒரு முறை எழுந்து சுயநினைவோடு பேசுமானால், அவை செய்யும் விமர்சனம் எதுவாக இருக்கும்?

கடந்துபோன காலங்களில், தாங்கள் உயிரோடு, உலாவிக் கொண்டிருந்தபோது நடத்திய போலித் தனமான வாழ்க்கையைப் பற்றியதாகத்தானே இருக்கும்!

முடிவைப் பற்றிய நினைவில்லாமல், எல்லாம் சாஸ்வதமென்று ஆடிய ஆட்டங்களைப் பற்றித்தானே இருக்கும்!

அவை எழுந்து பேச வேண்டும்;

அரசியல்வாதிகளைப் போல் பொது மேடை போட்டு முழங்க வேண்டும்.

'நான்' என்னும் ஆணவத்தின் அடித்தளத்தை நொறுக்கவும்,

பொருளாசையின் கழுத்தை நெரிக்கவும்,

அதிகார வெறியிலிருந்து மனிதர்கள் ஞானம் பெறவும்,

எலும்புக் கூடுகளின் உபன்யாசம் மிகவும் பயன்படும்.

இரண்டு கரைக்குள் ஓடவேண்டிய நதிகள், கரை யேருமல் இருப்பதற்குச் சுடுகாட்டு ஞானம் துணை யாகும்.

ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகப் பல்லாயிரங் கோடி மனிதர்களின் ஆசாபாசங்கள் பூமிக்கடியில் புதைந்து கிடக்கின்றன.

அவை தொடங்கிய வேகமும், முடிந்த பரிதாபமும் அடுத்த தலைமுறையினரால் உணரப்படவில்லை.

மரணம் அறிவுறுத்தும் நியாயம் மனங்களிக்கும் வாழ்க்கையில் இல்லை.

இலை உதிர்ந்த பிற்பாடு, 'மீண்டும் தழைப்போம்' என்ற உறுதியோடு மரங்கள் நிற்கின்றன.

ஆனல், அவை சாய்ந்த பிற்பாடு 'எழுவோம்' என்று நம்புவதில்லை.

ஆனல், மனிதனே, 'நிமிர்ந்தது நிமிர்ந்ததுதான்; சாயவே மாட்டோம்' என்று நிச்சயமாய் நம்புகிருன்.

ஆனல் இறைவா!

அவனை நீதான் விழவைத்து வேடிக்கை காட்டு கிருய்.

காற்றடங்கிக் கதை முடிந்தால், நேற்றையப் பொழுதோடு ஒரு போலி ஆர்ப்பாட்டம் முடிந்ததென்று நிம்மதியடைகிருய்.

நினைவுகளைச் சமன் செய்துகொள்ள முடியாத மனிதனை, மரணத்தின் மூலம் சமன் செய்கிருய்.

எப்போது உன் அழைப்பு வருமென்று எவருக்கும் தெரியாது.

முன்பெல்லாம் தபால் போட்டுப் பதில் கேட்டுப் பிறகு அழைத்துக் கொள்வாய்!

இப்போதெல்லாம் தந்தி அடித்தே அழைத்துக் கொள்கிருய்!

உன்ஊ எதிர்த்து மருத்துவம் முன்னேறிவிட்ட தால், 'கொஞ்ச நேரம்' சந்தர்ப்பம் கொடுத்தால் பிழைத்துக் கொள்வானே என்றெண்ணி, இருதயத் தைத் தொட்ட இரண்டாவது நிமிஷமே அவஊ வர வழைத்துக் கொள்கிருயே!

மரணத்தையும், அதற்குப் பின்னர் புகப்போகும் உலகத்தையும் மயக்கத்திலேயே வைத்திருக்கிருய்.

நிஊயில்லாதது வாழ்க்கை என்னும் உணர்ச்சியை ஒவ்வொரு நிமிடமும் நீ உணர்த்திக்கொண்டே இருந் தால் என்ன?

துன்பங்களுக்கே வித்திடும் மனித மஞேபாவம், பிறரைக் கொடுமை செய்யாமலிருப்பதற்கு அது நல்ல வழியல்லவா!

ஒவ்வொரு மனிதனும் காஊயில் கண் விழிக்கும் போது ஓர் அசரீரி பேசும்படி செய்தால் என்ன?

"என்றைக்கும் நீ சாகலாம்; ஏன் இன்றைக்கே கூடச் சாகலாம்!"

—என்று மூன்று முறை அது திருப்பித் திருப்பித் திருப்பிச் சொன்ஞலென்ன?

சந்தர்ப்பங்களையெல்லாம் தங்கள் திறமை என்று கருதுவோர்க்கு, ஒரு பொதுப் பள்ளிக்கூடம் வைத்தா லென்ன?

இவை உனக்குத் தெரியாததல்ல!

ஆயினும் இவற்றை ஏன் நீ செய்யவில்லை?

குழப்பம், அடிதடி, பரபரப்பு, ஆசை, பேராசை, திருட்டு, தற்கொலை இவையெல்லாம் இருந்தால்தான் உலக வாழ்க்கையில் உயிரோட்டம் இருக்குமென்று நீ நம்புகிருய்; இல்லையா?

மெத்தச் சரி.

இந்தக்குழப்பத்தில், என்னையும் சிக்கவைத்த உன் விளையாட்டுத்தனத்துக்கு என் நன்றி.

என்னைப் படைத்த குற்றத்திற்கு, நான்கொடுக்கும் இந்த எட்டாவது புஷ்பத்தையும் ஏற்றுக்கொள்.

# 9

**சா**லையோரத்தில் ஒரு கிழவன்.

நான் அவனைச் சந்தித்தேன்.

உரித்துக் காயப்போட்ட வாழை மட்டை போல் தளர்ந்து போன உடம்பு.

நீர் வற்றிய குளம்போல் வறண்டு கிடக்கும் கண்கள்.

பந்தாட்ட மைதானத்தில் முளைத்து, தண்ணீர் இல்லாமல் வாடும் புற்களைப்போல், அங்கொன்றும் இங்கொன்றுமாக முளைத்திருந்த நரை மயிர்கள்.

காலநதி ஓடி முடிந்து, வண்டல் மண் நெளிந்து படம் போட்ட கன்னங்கள்.

குழந்தைப் பருவம் மீண்டதுபோல், பல்லில்லாத வாய்.

இடுப்பிலே ஒரு வெற்றிலைப் பை.

இரண்டு கைகளாலும் முழங்காலைக் கட்டியபடி அமர்ந்திருந்தான்.

நான் அவனைக் கேட்டேன்:

'உனக்கு வயது என்ன தாத்தா?'

அவன் சொன்னான்:

'நூற்று இரண்டு!'

'நூற்று இரண்டு வயதுவரை உன்னை வாழ வைக்கும் இரகசியம்...?'

'கடவுள் என் ஏட்டைத் தொலைத்துவிட்டார் போலிருக்கிறது!'

'இதுவரை உன் வாழ்வில் எவ்வளவு இன்ப துன்பங்களைச் சந்தித்திருக்கிறாய்?'

கிழவன் சிரித்தான்.

'இந்தச் சிரிப்புக்கு அர்த்தம்...?'

'ஒரு சிறிய மூளையில் எவ்வளவு இன்ப துன்பங்களை நான் ஞாபகத்தில் வைத்திருக்க முடியும்?'

'நினைவில் உள்ள விஷயங்களையாவது சொல்லேன்!'

'இளமையில் நான் ஒரு அழகான வாலிபன். நான் கண்ணாடி பார்த்தால் என் கண்ணே என்மீது பட்டு விடும் என்பார்கள். என்னைச்சுற்றி வட்டமிட்ட சிட்டுக் குருவிகள் பட்டுப்பூச்சிகள் ஏராளம். கிராமத்துப் புஷ் பங்கள் எப்படி இருக்கும் என்பது உனக்குத் தெரியாத தல்ல. அந்த உதடுகள் சாயம் பூசப் பட்டவையல்ல; வெற்றிலை போட்டுக் கனிந்து சிவந்தவை. அவற்றில் முத்தமிட்டு நான் அனுபவித்த சுவை அதிகம். தட்டித் திரண்ட அந்த உடம்புகளை நான் கட்டிப்புரண்ட சுகமும் அதிகம். அவை ஒரு பிரம்மசாரியின் காதல் லீலைகள்! லீலைகள் முடிந்ததும், நான் தனிமையை உணருவேன். அப்போதுதான் நமக்கென்றே ஒருத்தி வேண்டுமென்ற முடிவுக்கு வந்தேன். அந்த நேரத்தில் கடவுள் தன் முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டிருக்கிறான். அவனது கருணை என்மீது விழ

வில்லை. அங்கிருந்துதான் என்னுடைய உண்மையான உலகமும், வாழ்க்கையும் தொடங்கின. விபரீதமான சிருஷ்டிகளை நான் உலகத்தில் சந்தித்தேன். என் பகைவர்கள் என் கண்ணுக்குத் தெரிந்தார்கள்...

'பகைவர்களா? யாரவர்கள்...?'

'என் நண்பர்கள்!...பாவப் பிறவியொன்று ருத்திர கோலத்தில், பிரிக்க முடியாதபடி என்னோடு பிணைக்கப்பட்டிருந்தது'

'யாரது?'

'என் மனைவி! சில வேட்டை நாய்கள் என்னைத் துரத்தித் துரத்திக் கடித்தன!'

'யாரைக் குறிப்பிடுகிறீர்கள்...?'

'என் குழந்தைகளை! நான் நரகத்திலிருப்பதை உணர்ந்தேன்!'

'நரகமென்பது...'

'இந்த நாடு!'

கிழவன் கொஞ்ச நேரம் மௌனத்திலிருந்தான்; நான் சிந்தனையில் ஆழ்ந்தேன்.

தன் துன்பங்களுக்குக் காரணம் தான் போட்ட வேலியும் தாலியும் என்பதை இந்தக் கிழவன் உணரவில்லையே! நாடே தன்னை வஞ்சித்துவிட்டதாகக் கருதுகிறானே...!

கிழவன் பேசத் தொடங்கினான்:

'எந்த இடத்தில்தோண்டினால் தண்ணீர் கிடைக்குமென்பது சில விவசாயிகளுக்குத்தான் தெரிகிறது.

தண்ணீரே இல்லாத பாறையைத் தோண்டி நான் அலுத்தேன். நீ சிந்தனையில் ஆழ்ந்தது எனக்குப் புரிகிறது. என்னுடைய துன்பங்கள் யாவும் என்னுடைய சிருஷ்டியே! இதிலே இறைவனை நான் நிந்திக்கவில்லை. ஆனால், துன்பங்களையெல்லாம் தனக்காகச் சிருஷ்டித்துக் கொண்டிருக்கும் ஒருமனிதனின் மரணத்தேதியை அவன் ஒத்தி வைத்துக்கொண்டே போகிறானே, அது ஏன்? மொத்தம் துன்பத்தில் எத்தனை வகையென்று பரிபூரணமாகக் கண்டுகொள்ளவா?, தம்பி! நீ இளைஞன். உன் கால்களில் சில முள்கள்தான் குத்தியிருக்கும். என்னுடைய கால்களோ இனி முள்ளுக்கு இடமில்லாதபடி ரணமாகிவிட்டன. உடம்பும் உள்ளமும் ரணமான பிற்பாடுதான் மனிதன் தன்னைப்பற்றிச் சிந்திக்கிறான். அவன் பிணமான அன்றுதான், உலகம் அவனைப் பற்றி சிந்திக்கிறது. இது என்னுடைய ரணக்கோலம். வாழ்க்கையில் சில நாளாவது சலனங்களற்ற மகிழ்ச்சியை அனுபவிக்க வேண்டுமென்று நான் வெகுவாக ஆசைப்பட்டேன்; கிட்டவில்லை. ஆண்டவன் எனக்கு நிர்ணயித்த அளவு அதுதான் என்று நான் அமைதியடையத் தயார். ஆனால், என்னைப்போன்ற வஞ்சகமற்ற சிலருக்குக் கையளவும், ஊரையடித்து உலையிலே போடுகிறானே அவனுக்குக் கடலளவும் நிர்ணயித்து அனுப்பி இருக்கிறானே, அந்த ஆண்டவனை விட ஒரு கொலைகாரன், திருடன், வஞ்சகன் யாரிருக்க முடியும்?...'

நான் குறுக்கிடுகிறேன்!

'தாத்தா, இறைவனை நிந்திக்காதே!'

'ஏன் தம்பி! வருமானம் என்பதே அவமானந்தான் என்று எனக்கு நிர்ணயித்த கடவுளுக்கு, நான் வெகு

மானமா தருவேன்? ஒவ்வொரு துயரத்தின் போதும் நான் எவ்வளவு துடித்திருப்பேன் தெரியுமா? இந்தப் பல கோடி மக்களிலும் நான்தான் கீழானவனே என்ற எண்ணம் எனக்குத் தோன்றித் தோன்றி, என்னை நானே வெறுக்குமளவுக்கு வளர்ந்திருக்கிறது; தன்னைத்தானே வெறுக்கும் ஒரு மனிதனின் அடுத்த சாபம் யார்மீது இடப்படும்? ஆண்டவன்மீதுதானே!'

'தாத்தா! உன்னுடைய துன்பங்களெல்லாம் உன்னுடைய சிருஷ்டியே என்று சொன்ன பிற்பாடு, ஆண்டவனை நோவதேன்?'

தம்பி, நான் ஆண்டவனுடைய சிருஷ்டி. அதனால் தான் அவனை நோகிறேன். படைக்கப்பட்ட பொருள் களுக்கு வழிகாட்ட முடியாத பரம்பொருள், பாவ புண் ணியங்களைப்பற்றி வேதம் உரைப்பானேன்? என் துயரங்கள் என்னால் நேர்ந்தவையென்றால், எனக்கு வழிகாட்டத் தவறிய குற்றம் இறைவனைச் சேர்ந்தது. இன்னும் என்னோடவன் விளையாடுகிறான். யாரும் எனக்கு நல்லவர்களாக இல்லை. அதனால்,நானும் மற்ற வர்களுக்குப் பயன்படவில்லை. இந்த நிலையில், எனக்கு ஏன் நூற்று இரண்டு வயது? ஜன்னத்தில் வழங்காத நிம்மதியை, மரணத்திலாவது அவன் வழங்கக் கூடாதா? நீ வேண்டுமானால் பார், ஒருவேளை நீ என் னுடைய பிணத்தைச் சந்திக்க முடியுமானால், உன் இறைவன் என் மரணத்தையும் கோரமரணமாக ஆக்கி யிருப்பதைக் காண்பாய்.'

இப்படிச் சொல்லிவிட்டுக் கிழவன் ஊமையானான். நான் எழுந்து நடந்தேன்.

இறைவா!

வாழ்க்கைத் தோல்வியில் அக்கிழவன் ஓர் அங்கம்.

உன்னுடைய கோரமான விளையாட்டுக்கு அவ னொரு பதுமை.

மாசில் வீணையே,

மாலை மதியமே,

வீசு தென்றலே,

வீங்கிள வேனிலே,

மூசு வண்டறைப் பொய்கையே,

கருணைக் கடலே,

ஞான விளக்கே—

—இந்தப் பட்டங்களெல்லாம் பொருத்தமில்லாத ஒருவன்மீது அர்த்தமில்லாமல் சூட்டப்பட்டவை தானே?

வாழ முடியாதவனுக்கு வயோதிகத்தையும்,

மருந்து வாங்க வசதியில்லாதவனுக்கு நோயையும்

அன்புக்கே ஏங்கும் ஒருவனுக்கு அடக்கமில்லாத உறவையும்,

பாசத்தில் உருகும் ஒருவனுக்கு மோசமான குழந்தைகளையும்,

தொடர்ந்து வழங்குவது உன் லீலைகளில் ஒன்று னால், உன்னைக் கல்லாகச் செம்பாகக் கண்ட பக்தர் களில் நான் ஒருவனக இருந்து, இரும்பாலும் உன்னைப் படைக்க விரும்புகிறேன்.

உலகத்தின் நாயகனே!

விமானத்திலிருந்து இறங்கிவரும் பலரில் ஒருவரை நான் வரவேற்க வந்து, அடையாளம் தெரியாத வேறொருவருக்கு மாலை போட்டுவிட்டேனா?

அதுதான் உண்மையென்றால், அந்தத் தவற்றை நான் திருத்திக்கொள்ள விரும்பாமல், அதே நபரின் கையிலேயே, இந்த ஒன்பதாவது புஷ்பத்தையும் வழங்குகிறேன்; ஏற்றுக்கொள்.

# 10

என் இறைவா,

குடிபோதையில் என் உளறல்கள் உண்மைகளாகின்றன.

அன்புப்போதையில் என் உளறல்கள் மழலைகளாகின்றன.

காதல் போதையில் என் உளறல்கள் கவிதைகளாகின்றன.

பக்திப் போதையில் என் உளறல்கள் உனக்குச் சூட்டப்படும் புஷ்பங்களாகின்றன.

இது எனது பத்தாவது புஷ்பம், பத்தாவது உளறல்.

மௌனத்தின் பரிபாஷையில் உனக்கு விடப்படும் தூது, மயக்கத்தைப் பதிலாகக் கொண்டுவருகிறது.

மயக்கமற்ற பதிலைப் பெறவே இந்த ஓலங்கள்!

மனதின் கோலங்களில் நினைத்த உருவம் விழாத போது, அந்த உருவத்தை வரவழைக்க ஒரு கதறல்.

மனிதர்களிடம் சொல்லித் தீர்வு காணமுடியாத போது, நீயே கடைசி அடைக்கலம்.

எனது குரலுக்கு ஓர் எதிரொலி இல்லாது போயினும், குரல்கொடுத்து விட்டதிலே எனக்கொரு நிம்மதி.

நான் அனுப்புகிற புறாக்கள் என்னிடம் திரும்பி வரவில்லையேனும், சில புறாக்களை அனுப்பியவன் என்ற திருப்தி,

ரசனையின் உச்சத்தில் உள்ளம் நெக்குருகுவது போல், எதிரில் இல்லாத உன்னிடம் பேசுவதிலும் ஒரு நெகிழ்ச்சி.

நான் உச்சியில் இருக்கும்போது நீ பள்ளத்தி லிருக்கிறுய்; நான் பள்ளத்தில் கிடக்கும்போது நீ உச்சியில் இருக்கிறுய்.

இருவரும் சந்திப்பதற்கான வாய்ப்புகள் இல்லை.

இது ஓசைக் குரலோ அன்றி ஆசைக் குரலோ? நீ கேட்டுக்கொண்டிருப்பதாகவே எனக்குள் ஒரு கற்பனை!

கடிவாளம் இல்லாத எனது குதிரை எங்கு ஓடினும், ஓய்வுக்காக ஒவ்வொரு தடவையும் உனது தேவா லயத்தையே நாடுகிறது.

ஆடைகள் பறிக்கப்பட்ட நிர்வாணக் கோலம் போல், ஆசைகள் பறிக்கப்பட்ட நிர்வாண உள்ளம் என் உள்ளம்.

எப்போதும் என்னை நீ முந்திக்கொள்ளுகிறுய்.

நீதி மன்றத்தில் வழக்கறிஞனுக நின்று நான் வாதாட விரும்புகிறேன்.

நீயோ, என்னைக் குற்றவாளியாகக் கொண்டுபோய் நிறுத்துகிறுய்.

மருத்துவமனையில் வைத்தியனுக இருக்க ஆசைப் படுகின்றேன்;

என்னை நோயாளியாக அங்கே கொண்டு செல் வதில்தான் உனக்கு நிம்மதி.

விளாம்பழத்தை யானை மிதித்ததுபோல், என் எண்ணங்களை உருக்குலையச் செய்வதில் உனக்கோர் ஆசை.

அருவருக்கத்தக்க உயிர்களுக்கெல்லாங்கூட அடைக்கலம் கொடுக்கும் பரம்பொருள், என் காலடி ஓசை கேட்டதுமே கதவை மூடிக்கொள்கிறான்.

ஆயினும் ஒவ்வொரு நாள் காலைப்பொழுதில் ஒரு மலரைப் பறித்துக் கொண்டு, இந்த ஆத்மா அவனது கோவிலை நோக்கி ஓடுகிறது.

என் இறைவா!

கோடை காலத்தில் ஏரிகளில் தோன்றும் வெடிப்பு களைப் போல், நூற்றுக்கணக்கான வெடிப்புகளும். கீறல்களும் இந்த உள்ளத்தில் விழுந்து கிடக்கின்றன

ஒவ்வொரு வெடிப்பினுள்ளும் கடைசி ஈரம் கசிந்து கொண்டிருக்கிறது.

மழைக்காலம் விலகிப் போய்க்கொண்டே இருக் கிறது.

நான் பார்க்கும் மேகங்களெல்லாம் நீர்ப் பிடிப் பின்றி வெண்மையாகவே இருக்கின்றன.

என்மேல் முளைத்த கருவேல மரங்களிலிருந்து, அவ்வப்போது முள்கள் உதிருகின்றன.

அவற்றைச் சுமக்கும் கடமையையும் எனக்கு நீ அளித்திருக்கிறாய்.

சந்நியாசியின் கோவணம்போலக் கடைசியாக என்னிடம் மிச்சமிருப்பது நம்பிக்கை,

அந்த நம்பிக்கையிலேயே என் ஆத்ம விளக்கை அவ்வப்போது ஏற்றிக்கொண்டிருக்கிறேன்.

காற்றுச் சலனத்திலும், ஊற்றுப் பெருக்கிலும் அவை அணைய அணைய, மீண்டும் ஏற்றுகிறேன்.

காட்டுப்புறங்களில் விவசாயிகள் ஏரோட்டும் ஓசையில், அவர்களது நம்பிக்கையைக் காணுகிறேன்.

நானும் நம்பிக்கை பெறுகிறேன்.

எங்கெல்லாம் சிரிப்புச் சத்தம் கேட்கிறதோ அங்கெல்லாம் ஒரு புதிய நம்பிக்கையை உருவாக்கிக் கொள்கிறேன்.

நீ எனக்களிக்காத ஓர் உயர்ந்த இடத்தை, என் கற்பனையில் நானே உருவாக்கிக்கொண்டு, கொஞ்ச நேரம் மகிழ்ச்சி யடைகிறேன்.

திருவிழாவுக்காக அலங்கரிக்கப்பட்ட தேரில் நானே சிலையாக இருப்பது போலவும்,

திருமணத்துக்காகச் சிங்காரிக்கப்பட்ட வீட்டில், நானே மணமகனாக இருப்பது போலவும்,

பாராட்டுவதற்காகக் கூட்டப்பட்ட கூட்டத்தில், நானே புகழுடைத் தலைவனாக இருப்பது போலவும்,

—எனக்கு நானே் தலைவாரிப் பூச்சூட்டிச் சந்தோஷப்படுகிறேன்.

பூஜ்ஜியத்தில் எந்த எண்களையும் ஐந்தால் வகுக்கலாம்.

சூன்யமான எந்த உள்ளமும் கற்பனையில்தான் மகிழ்ச்சியடையலாம்,

எனது கற்பனைகள் வானத்தில் பறக்கின்றன.

அவை பொய்யாகி வெடித்துச் சிதறும்போது, உனது தேவாலயத்தில் எனது மெழுகுவர்த்திகள் எரிகின்றன.

நடைமுறை நியாயம் மறுக்கப்படும் போது; கடவுளின் நியாயத்துக்காக உருகுகின்றன.

அலங்காரத்துக்காக்ப் போடப்படும்மேலங்கியைப் போல், எனது பக்தியும் அலங்காரமல்ல!

ஆகவே, நான் உதைத்துத் தள்ளப்படும் போதெல்லாம், நான் விழும் இடம் உன் மடியாகவே இருக்கிறது.

பரிகாரமற்ற துயரங்களை வெளிச்சமிட்டுக் காட்டவே, உனது தேவாலயத்தில் எனது மெழுகு வர்த்திகள் எரிகின்றன.

நீண்ட பயணத்தின் நிகழ்ச்சிகளையும் விளைவு களையும் எடுத்துச் சொல்லிவிட்டு, மாண்டு போவதற் காகவே, உனது தேவாலயத்தில் எனது மெழுகு வர்த்திகள் எரிகின்றன.

என்றோ ஒருநாள், ஊசலாடிக்கொண்டிருக்கும் இந்தச் சலனக் காற்று ஓயப் போகிறது.

'காற்று ஓய்ந்தது' என்று சில கன்றுகள் கதறப் போகின்றன.

எனது பழைய கணக்குகளை ஐந்தொகை போட்டுச் சிலர் முணுமுணுக்கப் போகிறார்கள்,

காற்று அடங்கு முன்பு வாசமாக இருந்த ரோஜா மாலைகள், காற்றடங்கிய பின் மேடையின் மீது விழும் போது, அவை வாசமுள்ளவையா இல்லாதவையா என்று நான் அறியப் போவதில்லை.

சடலம் காட்சிக்காக வைக்கப்படும்போது, பன்னீர் ஊற்றப்படும்போது, பக்கத்தில் ஊதுவத்திகள் எரியப்போகின்றன.

ஹிந்து சம்பிரதாயத்தில் முக்கியமான குத்து விளக்குகள் எரியப் போகின்றன.

அதுவரையில் உனது தேவாலயத்தில் எனது மெழுகுவர்த்திகள் எரிகின்றன.

'இவனா அவன்?' என்று பார்ப்போரும், 'இவன் தான்அவன்' என்று பேசுவோரும்,முன்னும் பின்னும் நடந்துவர,

பல குளங்களில் தவம் செய்த கொக்கு, ஊர்வலம் வரப் போகிறது.

நன்மை தீமைகளைப் பற்றி,

நடப்பவை நடக்காதவை பற்றி,

ஜனனம் மரணம் பற்றி,

காதல் களியாட்டங்கள் பற்றி,

அவலம் அழுகை பறறி,

ஆரவாரம் முழக்கம் பற்றி,

புகழ்ச்சிகள் இகழ்ச்சிகள் பற்றி,

பொய்கள் உண்மைகள் பற்றி,

முதலாளி தொழிலாளி பற்றி—

—வழியெங்கும் பாடல்கள் ஒலி பரப்பாகின்றன.

எல்லோருக்கும் கேட்கும்படியாகவும், எழுதியவன் மட்டும் கேட்க முடியாமலும், அந்த ஊர்வலம் தொடர்ந்து போகிறது.

ஊர்வலத்தின் முன்னுல், ஓர் இளைஞனின் கையிலுள்ள சட்டியில், அரை நெருப்பு எரிந்து கொண்டிருக்கிறது.

அதுவரை உனது தேவாலயத்தில் எனது மெழுகு வர்த்திகள் எரிகின்றன.

கணக்கு முடித்து, வருமான வரி கட்டித் தீர்ந்து போன ஏடுகளும்,

கள்ளக் கடத்தல்காரர்கள், காதலர்கள், புரட்சிக்காரர்கள் ஆகியோரின் ரகசியக் கடிதங்களும்,

—ஒரு கட்டத்தில் கொளுத்தப்படுவது போல, அந்தச் சடலமும் கொளுத்தப்படுகிறது.

அதுவரை, உனது தேவாலயத்தில் எனதுமெழுகு வர்த்திகள் எரிகின்றன.

எரிகின்ற மெழுகுவர்த்திகளையெல்லாம், எரிந்து முடிந்தபின் மீண்டும் ஏற்ற முடியாது.

தெரிந்தே அவை எரிகினறன.

ஆசை என்னும் நெருப்பு, பாசம் பற்று என்னும் நெருப்பு, காதல் இரக்கமென்னும் நெருப்பு—எந்த நெருப்போ, மெழுகுவர்த்திகள் எரிகின்றன.

எரிந்து எரிந்து உருகுகின்றன.

உருகி ஆவியானவை போக, ஒழுகிய துணுக்குகள் அடையாளம் காட்டுகின்றன.

நானும் அப்படியே!

கடைசியாகக் கீழே விழுந்து கோலம் போடும் எனது அடையாளங்கள், மனிதர்களால் மிதிக்கப் பட்டாலும், உன்னுல் மதிக்கப்படும் எனும் நம்பிக்கை யில்தான், உனது தேவாலயத்தில் எனது மெழுகு வர்த்திகள் எரிகின்றன.

எரிகின்றவரை அவை எரியட்டும்.

தெரிகின்ற வெளிச்சத்தில் எதை எதைக் காண முடியுமோ, அவற்றையெல்லாம் கண்டு சொல்லி விட்டேன்.

ஒன்பது தடவை நான் உளறி முடித்ததற்குப் பத்தாவதாகப் போடப்படும் இந்த முத்திரையோடு, இந்தப் பத்தாவது புஷ்பத்தையும் ஏற்றுக்கொண்டு, என்னைத் தனியே விடு.

———

